சங்கீத மும்மூர்த்தி

# சத்குரு ஸ்ரீ தியாகராஜர்



டாக்டர் கே. ஏ. பக்கிரிசாமிபாரதி

எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி., டி. இசை., டி. இதழ்.,

குசேலர் பதிப்பகம்

சென்னை - 600 078

# சங்கீத மும்மூர்த்தி

# சத்குரு ஸ்ரீ தியாகராஜர்




**டாக்டர் கே. ஏ. பக்கிரிசாமிபாரதி**

எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி., டி. இசை., டி. இதழ்.,

முதல்வர்

தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரி

மதுரை - 625 004



**குசேலர் பதிப்பகம்**

சென்னை - 600 078

# நூல் பற்றிய குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | சங்கீத மும்மூர்த்தி **சத்குரு ஸ்ரீ தியாகராஜர்** |
| ஆசிரியர் | : | **டாக்டர் கே. ஏ. பக்கிரிசாமிபாரதி**<br>எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி., டி. இசை., டி. இதழ்.,<br>முதல்வர்<br>தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரி<br>பசுமலை, மதுரை - 625 004. |
| பதிப்பகம் | : | **குசேலர் பதிப்பகம்**<br>3, பெரியார் நகர், நெசப்பாக்கம்<br>கலைஞர் கருணாநிதி நகர் (மேற்கு)<br>சென்னை - 600078. |
| நூல் உரிமை | : | © பொறியாளர் திரு. இர. குசேலர் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீடு | : | 06-01-1999<br>சத்குரு ஸ்ரீ தியாகராஜரின் 152-ஆவது<br>ஆராதனை விழா நினைவு வெளியீடு |
| பக்கங்கள் | : | 10+54=64 |
| விலை | : | ரூபாய் 20.00 |
| ஒளி அச்சு | : | குரு இராகவேந்திரா கிராபிக்ஸ், மதுரை-1 |
| அச்சகம் | : | வேன்கார்டு பிரஸ், மதுரை -7 |
| நூலாக்கம் | : | திரு. எஸ். பூபதி பைண்டர்ஸ், மதுரை-2 |

III

# இயலிசைப் புலவரின் இனிய வரலாறு

## அணிந்துரை

முனைவர் நெல்லை ந. சொக்கலிங்கம்
தமிழ்ப் பேராசிரியர்
தொலைநிலைக் கல்வி இயக்ககம்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை – 625 021.

இசைவல்லுநர் தியாகப் பிரம்மத்தின் பல்வேறு திறங்களைத் துலக்கிக் காட்டும் வகையில் முனைவர் கொ.ஆ. பக்கிரிசாமி பாரதி அவர்கள் முயற்சி எடுத்துள்ளமையை நான் பாராட்டுகின்றேன். என்னுடைய ஆய்வு மாணவர்; அவர் சார்ந்துள்ள இசைத்துறையில் நூல் வெளியிடுவது போற்றத்தக்கது; வரவேற்கத்தக்கது. நாரத முனிவரின் அருளைத் தியாகராசர் பெற்ற பாங்கினை நூலாசிரியர் நன்கு விளக்கிக் காட்டியுள்ளார். மனிதனைப் பாடாமல் இறைவனையே பாடிப்பரவிய தியாகராசரின் உயர்ந்த குறிக்கோளை இவர் விரிவாக விளக்கியுள்ளார். இந்நூலில் நாள்தோறும் உஞ்சவிருத்தி செய்து இறையுணர்வு நிறைந்த கீர்த்தனைகளைப் பாடி எளிய வாழ்வு வாழ்ந்த தியாகப் பிரம்மத்தின் வாழ்வு இசைவாணர்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குதல் ஒருதலை. இசையால் இணையற்ற இராமபிரானின் புகழை எடுத்தியம்பிய தியாகராசரின் பெருமை இந்நூலில் விரித்துரைக்கப் பெறுகின்றது.

தியாகராசருக்கு இராமபிரான் மேல் இருந்த இறையுணர்வின் சிறப்பையும் அளவிறந்த ஈடுபாட்டையும் எடுத்து விளக்குகிறது இந்நூல். அரங்கேற்றத்தின் போது, "தொரு குணா இடுவம்டி சிஷ்யிடு" என்று அவருடைய ஆசிரியராம் சொண்டி வேங்கடரமணய்யரால் தியாகராசர் புகழப் பெற்றமையினை ஆசிரியர் திரு பக்கிரிசாமிபாரதி நன்முறையில் கூறுகின்ற பாங்கு இன்புறத்தக்கது.

நாகலாபுரம் ஆறலைகள்வர்களிடமிருந்து தியாகராசரைக் காத்தவர்கள் இராமபிரானும் இலக்குவனும் என்கிற செய்தியை நூலாசிரியர் நயமாக எடுத்துரைத்துச் செல்கின்றார். இராமபக்தியின் மேன்மையை இந்தக் கட்டுரை தெளிவுறுத்துகின்றது.

'மனிதனைப் பாட மாட்டேன்' என்னும் மூன்றாவது கட்டுரையில் இசையைக் காசுக்கு விற்பது கூடாது என்ற அழுத்தமான எண்ணத்தை தியாகப் பிரம்மம் எப்படிப் பின்பற்றினார் என்பதனை நூலாசிரியர் நன்கு விளக்கியுள்ளார்.

மன்னர் சரபோஜியின் பணவுதவியைக்கூடத் தியாகராசர் பொருட்படுத்தவில்லை என்றால் அவர் தம் எளிய வாழ்வு இனிது விளங்கும். பரமனைப் பாடிய வாயினால் மனிதரைப் பாட மறுத்த அவர்தம் உள்ளத்திண்மை திருவிதாங்கூர் சுவாதித்திருநாளின் அரண்மனை அழைப்பை மறுத்தமையிலிருந்து தெளிவாகின்றது.

'தியாகராசரின் இசைப்பாடல்கள்' என்ற நான்காவது கட்டுரையில் அவர் இயற்றியுள்ள 'சீதாராம விஜயம்', 'பிரகலாத பக்த விஜயம்' போன்ற நாடகங்கள் வாயிலாக இசைத்துறைக்கு அவர் செய்துள்ள பெரும் தொண்டு நூலாசிரியரால் தெளிவாகப் பேசப் பெறுகின்றது. வான்மீகியின் வழியில் தியாகராசர் இராமாயணத்தை 24,000 கீர்த்தனைகளாகப் பாடிப் பரவிய பாங்கு அறிந்து இன்புறத்தக்கது.

'தியாகராசரின் நன்மாணாக்கர்கள்' என்ற கட்டுரையில் பல்லவி துரைசாமி ஐயர், சபாபதி சிவன் போன்ற பல மாணவச் செல்வங்களைக் குறித்துப் பேசுகின்றார். இசையுலக மும்மூர்த்திகளின் வழியினர் யாவரும் தியாகராசர் தம் மாணக்கர்களாக விளங்கிய பெற்றியை ஆசிரியர் விரித்துரைக்கின்றார்.

சியாமா சாத்திரியும் முத்துசாமி தீட்சிதரும் அவர்கள் வாழ்ந்த காலத்தில் பொறுப்பில் இருந்த சமஸ்தானங்களால் பேணப்பட்டனர்; போற்றப்பட்டனர்; சிறப்பிக்கப்பட்டனர். ஆனால் தியாகராசரை சரபோஜியும் திருவனந்தபுரம் சுவாதித்திருநாளும் வலிய வந்து சிறப்பிக்க முனைந்தனர்; இருந்தும் தியாகப் பிரம்மம் ஏற்கவில்லை. இவை இறைவனுக்கே இசை வெள்ளத்தை ஒப்படைத்து உலகப்புகழ் பெற்ற தியாகராசரின் இசைத்தொண்டினைப் பறைசாற்றி நிற்கும் அரிய சான்றுகளாகும்.

தமிழ்நாடு அரசு இசைக்கல்லூரியின் முதல்வர் ஆகிய முனைவர் கொ.ஆ. பக்கிரிசாமி பாரதி அவர்கள் தொண்டு சிறக்க வாழ்த்துகின்றேன். இவர் இன்னும் பல நூல்கள் எழுதி இசைத்துறையை மேலும் வளப்படுத்திட அன்னை அங்கயற்கண்ணியும் ஆலவாய் அண்ணலும் துணை நிற்பார்கள் ஆகுக.

ந. சொக்கலிங்கம்

25-12-98

மதுரை – 625 021

# 'தியாகராஜ பக்தி'யில் தலைசிறந்து நிற்கும் பக்கிரிசாமி பாரதி

## மதிப்புரை

முனைவர் இரா.மோகன்
பேராசிரியர், ஒப்பிலக்கியத்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை – 625 021

'இசை' என்ற சொல்லுக்குத் தமிழில் 'இசைவிப்பது' – 'தன்வயப்படுத்துவது' என்று பொருள் கூறுவர் அறிஞர். ஆறலை கள்வரின் மனத்தையே மாற்றி அவர் தம் கையில் உள்ள கொலைக்கருவியைக் கீழே போடச்செய்யும் ஆற்றல் படைத்தது இசை; யானையின் மதத்தையே போக்கி அதனை இயல்பு நிலைக்குக் கொண்டு வரும் திறம் பெற்றது இசை. இங்ஙனம் பழந்தமிழ் இலக்கியங்கள் இசையைச் சிறப்பித்துப் பேசும் இடங்கள் பல உண்டு. ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர் சுட்டும் பண்ணத்தி, ஓங்கு பரிபாடல், 'பண் என்னாம் பாடற்கு இயைபு இன்றேல்?' என்னும் வான்புகழ் வள்ளுவரின் வாக்கு, நெஞ்சை அள்ளும் சிலம்பிற்கு அடியார்க்கு நல்லார் வரைந்த உரை, நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தரின் பதிகங்கள், 'வானரங்கள் கனி கொடுத்து மந்தியோடு கொஞ்சும்' என்று பாடி நம் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட திருக்குற்றாலக் குறவஞ்சி, பண்ணோடு ஒருவன் பாடினால் கேட்போரைக் கிறுகிறுக்கச் செய்யும் வல்லமை படைத்த 'பாட்டுக்கொரு புலவன்' 'சிந்துக்குத் தந்தை' பாரதியின் பாடல்கள், பேச்சுச் சந்தத்தால் (Speech Rhythme) நம்மை ஈர்க்கும் நல கவிதைகள் இங்ஙனம் தமிழ் இலக்கிய உலகில் இசை என்னும் பெருவெள்ளம் பாய்ந்து வளப்படுத்தியுள்ள பகுதிகள் பலப்பலவாகும்.

இசையுலகில் 'மும்மூர்த்திகள்' என்று பெயர் பெற்றவர்கள் 'உலா வரும் ஒளிக்கதிர்'களாய் விளங்கியவர் சியாமா சாஸ்திரி, தியாகராஜர்' முத்துசாமி தீட்சிதர் என்னும் மூவர் ஆவர். இம்மூவருள் ஒருவரான– ஒப்பற்றவரான–தியாகராஜரின் தனிப்பெருங்குணங்களையும் வியத்தகு வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் படம்பிடித்துக் காட்டும் வகையில்

உருவாக்கப்பட்டுள்ள நூலே 'சங்கீத மும்மூர்த்தி சத்குரு ஸ்ரீ தியாகராஜர்' எனப் பெயரிய இந்நூல். இதன் ஆசிரியர் முனைவர் கே.ஏ. பக்கிரிசாமி பாரதி இசைக்கல்லூரியின் முதல்வர் பொறுப்பை அணி செய்பவர்; புல்லாங்குழல் இசையில் தனித்திறம் சான்றவர்; அறிவுக் கூர்மையும் மக்கட்பண்பும் ஒருங்கே குடிகொண்ட கெழுதகை நண்பர். அவரது கைவண்ணத்தில் உருவாகியுள்ள இந்நூல் பயில்வோர் அனைவரையும் சிக்கெனப் பிடித்துக் கொள்ளும் சீரும் சிறப்பும் வாய்ந்தது என்பது நெற்றித்திலகம்.

'உஞ்சவிருத்தி' என்னும் எளிய தத்துவத்தையே வாழ்நாள் முழுதும் பின்பற்றியவர் தியாகராஜர்; அவரது இராமபக்தி நிலத்தினும் பெரிது, வானினும் உயர்ந்தது; கடலினும் ஆழம் மிக்கது. 'மனிதனைப் பாட மாட்டேன்' என்னும் கொள்கையில் தியாகராஜர் கடைப்பிடித்த உறுதி, 'உறுதி' என்னும் சொல்லுக்கே உயிருள்ள இலக்கியமாக அமைந்த ஒன்றாகும். அதே நேரத்தில் உண்மையான இசைக் கலைஞர்கள் எங்கே இருந்தாலும் அவர்களைத் தட்டிக் கொடுத்து ஊக்கம் தரவும் நம் தியாகராஜர் தயங்கவில்லை, தவறவில்லை. மனோதர்ம சங்கீதமே வலம் வந்து கொண்டிருந்த பழம்போக்கினை அடியோடு மாற்றி, முதன்முதலாக 'சங்கதிகள் போட்டுப் பாடும் முறை'யில் கீர்த்தனைகளை இயற்றித் தந்தது தியாகராஜரின் இமாலயச் சாதனை ஆகும். 'ஒக மாட, ஒக பாண, ஒக பத்தினி' (ஒரு சொல், ஒரு வில், ஒரு இல்) என்பது தியாகராஜரின் முத்திரை வாக்கு. 'நாதப் பிரம்மானந்தர்' எனச் சிறப்பிக்கப் பெற்ற தியாகராஜரின் இசைப்பாடல்கள் அனைத்தையும், நேரு பெருமகனார் கூறியிருப்பது போல், இந்திய மொழிகள் எல்லாவற்றிலும் மொழி பெயர்க்கவேண்டும். தியாகராஜரின் நன்மாணாக்கர் பரம்பரையையும், அவரது வம்சாவளி இசை மரபையும் இந்நூலாசிரியர் தொகுத்தும் தொடுத்தும் தந்திருக்கும் பாங்கு நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றது.

இரத்தினச் சுருக்கமாய் ஒரே வரியில் சொல்லவேண்டும் என்றால், 'இராமபக்தி'யில் சிறந்து விளங்கினார் தியாகராஜர்; நம் இசைக்கல்லூரி முதல்வர் பக்கிரிசாமி பாரதியோ இசைக் கருவூலமாம் 'தியாகராஜ பக்தி'யில் தலைசிறந்து விளங்குகின்றார். இது உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை'

*இரா. மோகன்*

30-12-98
மதுரை – 625 021

## தொகுத்து வழங்குவதில் தொல்காப்பியம் வழி

## சிறப்புரை

முதல்வர் மா. இராசு,
தமிழ்நாடு அரசு இசைக்கல்லூரி
கோயம்புத்தூர் – 641002.

தியாகராஜர் அக்காலத்தில் சாதாரண மனிதராகவே வாழ்ந்து வந்தார். அவர் இராமனைத் தவிர வேறு ஒன்றையும் நினையாதவராயினும் அவருடைய சுற்றுப்புறச் சூழ்நிலைகள் அவரது பக்தி நெறிக்குப் புறம்பாகவே இருந்து வந்துள்ளன. அந்த பின்னணிகளை வைத்தே அவர் தமது பாடல்களைப் பாடியுள்ளார். பலதரப்பட்ட மக்களின் விசித்திரமான மனோபாவங்களை எடுத்துக் காட்டியும் பாடியுள்ளார். மேலும் அவர் தமது மனத்தையே 'மனஸா' என்று அழைத்துக் கொண்டும் பாடியுள்ளார்.

இசை நிகழ்ச்சிகளில் தியாகராஜரின் கீர்த்தனைகளே மிகவும் அதிகமாகவும், சிறப்பாகவும் பாடப்பட்டு வருகின்றது. தெலுங்கு மொழியிலுள்ள இந்தக் கீர்த்தனைகளை கையாள்பவர்களிலும், இரசிப்பவர்களிலும் பெரும்பாலோரால் இராகங்களின் அழகினையும், இனிமையையும் பல்வேறு கோணங்களில் வெளியிடுவதற்கும், இசை அழகினை இரசிப்பதற்கும் மட்டுமே, சாகித்யங்கள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

தியாகராஜரின் சாகித்தியங்களில் பொதிந்துள்ள பொருள் நயத்தையோ, நுட்பமான கருத்து ஆழத்தையோ, அறிந்து இவைகளில் பெறவேண்டிய பயனை முழுமையாகப் பெறும் வாய்ப்பின்றி, இசை நயத்தை மட்டும் இரசிப்பதுடன் திருப்தி பெறுகின்றோம். இந்த சாகித்தியங்களில் உள்ள பொருள் நயம், கருத்துச் செறிவு, உணர்ச்சி பாவம் போன்றவற்றையும் உணர்ந்து, இவைகளின் பயனை முழுமையாகப் பெறும் வாய்ப்பினை வழங்கிட, ஏதேனும் ஒரு யுக்தியை நாம் கையாள வேண்டும்.

இக்காலத்தில் சங்கீத வித்துவான்கள் கீர்த்தனைகளுக்கு எவ்வளவு அதிகமான சங்கதிகள் போட்டுப் பாட முடியுமோ, நிரவல், கற்பனை ஸ்வரங்கள் போட்டுப் பாட வேண்டுமோ, அதற்கும் அதிகமாகப் பாடி கைதட்டல் வாங்க முயற்சிக்கின்றார்கள். அவர்கள் சற்று யோசித்து தாம் பாடப் போகும் கீர்த்தனைகளின் கருத்தையும், பின்னணியினையும் ஒருமுறை மனத்தில் வாங்கிக் கொண்டு பாடினால் அவர்களுடைய இசை நிகழ்ச்சி சிறப்புடையதாக அமையும். அதற்குத் துணைபுரியும் வகையில் "சங்கீத மும்மூர்த்தி சத்குரு ஸ்ரீதியாக ராஜர்' என்ற இந்நூல் அமைந்துள்ளது.

இசைத்துறையின் வளர்ச்சியில் 'இலட்சிய சங்கீதம், இலட்சண சங்கீதம்' என்னும் இரண்டு பிரிவுகள் உள்ளன. இலட்சிய சங்கீதம் என்பது பாடுவது. இலட்சண சங்கீதம் என்பது இசை இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளது. இதில் தன்னிகரற்று விளங்குபவரே எமது கெழுதகை நண்பர் டாக்டர் கே. ஏ. பக்கிரிசாமிபாரதி.

இவரது மற்ற நூல்களும் விரைவில் வெளிவரவேண்டும் என்பது எமது அவா. வளர்க இவரது இசைப்பணி! வாழ்க!

கோவை – 2 முதல்வர் மா. இராசு.

30-12-1998

# ஆசிரியர் உரை

இசைத்துறையின் பல்வேறு சிறப்புக்களையும் படிப்படியாக விளக்கி, தலைசிறந்து விளங்கும் இக்கலையின் அமைப்பையும், நுண்மைகளையும் இக்கலையில் ஈடுபட்டுள்ளோர் மட்டுமன்றி, ஈடுபாடு கொண்டவர்களும் அறிந்து தெளிவுறும் வகையில் எளிமைப்படுத்தி, இதுவரை பல ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் பத்திரிகைகளில் எழுதியுள்ளேன். மேலும் இவற்றைப் பல பல்கலைக்கழகங்களிலும், இசைவிழா சங்கீத மேடைகளிலும், வானொலிகளிலும், தொலைக்காட்சியிலும், சொற்பொழிவுகளாகவும், செயல்முறை விளக்க நிகழ்ச்சிகளாகவும், இசைநிகழ்ச்சிகளாகவும் வழங்கியுள்ளேன்.

எமது இசை ஆராய்ச்சிக் கல்வியின் மூலமும், இருபது ஆண்டு கால இசை கற்பித்தல் மற்றும் இசைத்துறையின் பல்வேறு வகைப் பணிகளின் மூலமும் நான் பெற்ற அனுபவ வாயில்களே இவைகள். இவை, இசைவரலாறு, இசை வகைகள், இசைக்கருவிகள், இசைக்கலைஞர்கள், இசை அமைப்புகள், தாள அமைப்புகள், பாடல் தொகுப்புகள் என்னும் ஏழு தலைப்புகளில் அடங்கும்.

நான் கோவை மற்றும் மதுரை அரசு இசைக்கல்லூரிகளில் முதல்வராகப் பணியாற்றிய பொழுது மாணவர்களுக்கு தியாகராஜரின் பல்வேறு சிறப்புக்களைப் பற்றிப் பல கோணங்களில் பாடம் நடத்தியுள்ளேன்.

மேலும் 'தியாகராஜரின் உலகள..விய இசைப்புகழுக்கு அடிப்படைக் காரணமாக விளங்குவது' அவரது 'சாத்வீதக் குணமே, இராமபக்தியே, மனிதனைப் பாடாமையே, இசைப்பாடல்களே, நன்மாணக்கர்களே, வம்சாவளிகளே' என்னும் தலைப்புக்களில் மாணவர்களுக்கு கருத்தரங்கங்களில் பேசுவதற்குப் பயிற்சி அளித்துள்ளேன். எமது தலைமையில் சில பட்டிமன்றங்களில் மாணவர்களைப் பேசவைத்து தியாகராஜரின் நூற்றுக்கணக்கான நன்மாணக்கர்களால் தான் ' அவருக்கு உலகளாவிய இசைப்புகழ் கிடைத்திருக்கின்றது' என்ற முடிவு வழங்கிய பொழுது, அது அனைவராலும் பாராட்டப் பெற்றுள்ளது. மேலும் மேற்கண்ட தலைப்புக்களில் கட்டுரைகளையும் அவ்வப்பொழுது சில பத்திரிகைகளில் எழுதியுள்ளேன்.

குசேலர் பதிப்பகம் அவற்றையெல்லாம் தொகுத்து 'சங்கீத மும்மூர்த்தி சத்குரு ஸ்ரீ தியாகராஜர்' என்னும் தலைப்பில் மிகவும் சிறப்பான முறையில் இந்நூலினை வெளியிட்டுள்ளார்கள். அவர்களுக்கு எமது நன்றி. மேலும் இந்நூலுக்கு அணிந்துரையை ஆய்வுரையாக வழங்கியுள்ள பேராசிரியர்கள் டாக்டர் இரா. மோகன் அவர்கள் டாக்டர் நெல்லை ந. சொக்கலிங்கம் அவர்கள், கோவை இசைக்கல்லூரி முதல்வர் திரு மா. இராசு அவர்கள் ஆகியோருக்கும் என் மனம் நிறைந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

மதுரை – 4 டாக்டர் கே.ஏ.பக்கிரிசாமிபாரதி

31-12-1998

# நூல் அகம்

## விரைவில் வெளிவர இருக்கும் இந்நூலாசிரியரின் மற்ற நூல்கள்

 தமிழிசை

 தமிழிசையும் தேவாரமும்

 தமிழக இசைமரபில் தாளக்கலை

 தமிழரின் தொன்மையான இசைக்கருவிகள்

 நாகசுரம் இசைக்கருவி

 திருக்கோயில் நுண்கலைகள்

 கிராமிய இசைவடிவில் சிலப்பதிகாரம்

### *பார்வை நூல்கள்*


1. எ. சுந்தரமையர் – வாக்கேயக்காரர்களின் சரித்திரம்
2. கே.ஆர்.சேதுராமன் – ஸ்ரீதியாகராஜ வேங்கட்ரமண சரித்திரம்
3. வேங்கட்ரமணபாகவதர் – வாலாஜாபேட்டை ஏட்டுச்சுவடிகள்
4 P. Sambamoorthy - Great Composers Book I & II.



" ஸ்வாமிகிஸரி எவ்வரனவசு
ஸ்வர ராக ஸுதாநிதிசந்த்ருடே "



“ கரமுந சர கோதண்ட காந்திதோ
தரணி தநயதோ ”

## விரைவில் வெளிவர இருக்கும் இந்நூலாசிரியரின் மற்ற நூல்கள்

- தமிழிசை
- தமிழிசையும் தேவாரமும்
- தமிழக இசைமரபில் தாளக்கலை
- தமிழரின் தொன்மையான இசைக்கருவிகள்
- நாகசுரம் இசைக்கருவி
- திருக்கோயில் நுண்கலைகள்
- கிராமிய இசைவடிவில் சிலப்பதிகாரம்

### *பார்வை நூல்கள்*


1. எ. சுந்தரமையர் – வாக்கேயக்காரர்களின் சரித்திரம்
2. கே.ஆர்.சேதுராமன் – ஸ்ரீதியாகராஜ வேங்கட்ரமண சரித்திரம்
3. வேங்கட்ரமணபாகவதர் – வாலாஜாபேட்டை ஏட்டுச்சுவடிகள்
4 P.Sambamoorthy - Great Composers Book I & II.

# I. தியாகராஜரின் வாழ்க்கை வரலாறு

## சத்குரு ஸ்ரீ தியாகராஜர் (1767 - 1847)

தியாகராஜர் தஞ்சாவூர் மாவட்டம் திருவாரூரில் இராமப்பிரம்மம், சீத்தம்மாள் தம்பதியர்க்கு மகனாக 4–5–1767 – இல் பிறந்தார். 1772- இல், தனது 6–வது வயதில் கொடிய நோய் பீடித்திருந்தபோதிலும், பிறகு திடகாத்திரமாக வளர்ச்சியடைந்தார். 1774–ல் அவருக்கு உபநயனம் செய்விக்கப்பட்டது.

அவரது பாட்டனார் கிரிராஜகவி சிறந்த வாக்கேயக்காரராவார். இவரது தாய்வழிப் பாட்டனார் இராமகாளாஸ்திரி ஐயர் சிறந்த வீணை வித்துவானாவார். இவரது தந்தை இராமாயணப் பிரசங்கம், கதா காலட்சேபம் செய்வதில் வல்லவர். இவர்கள் எல்லோருமே தஞ்சை சமஸ்தானத்தில் கலைஞர்களாக வீற்றிருந்தனர்.

தியாகராஜர் கல்வியில் தந்தையையும், இசையில் தாயையும் பின்பற்றிச் சிறந்த ஞானத்தை அடைந்தார். குடும்பம் தந்தையின் வேலை காரணமாகத் திருவாரூரிலிருந்து திருவையாற்றுக்கு வந்து சேர்ந்தது. அங்கு 1782–இல், தமது 16– ஆம் வயதில் சொண்டி வெங்கடரமனையரிடம் இசையைக் கற்றுத் தேர்ந்தார். சரியாக ஒரு வருடத்தில் இலட்சிய – இலட்சண சங்கீதங்களில் நல்ல தேர்ச்சி பெற்றார். 1783 முதல் சிறிய கிருதிகளையும், திவ்விய நாமக் கீர்த்தனைகளையும் இயற்றிப் பாடத்தொடங்கினார்.

1784 - இல் தமது 18 –ஆம் வயதில் பார்வதி என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். 1785 – இல் புதுக்கோட்டை ராமச்சந்திர தொண்டைமானின் சமஸ்தானத்தில் ஜோதீஸ்வரூபிணி ராகம் பாடி இசையால் குத்து விளக்கினை ஏற்றினார். 1787 – இல் தமது 21 – ஆம் வயதில் தந்தை இராமப்பிரம்மம் காலமானார். அதனால் தியாகராஜர் மிகவும் வருத்தமுற்றார். 1787 முதல் இராமகிருஷ்ண யதீந்திரர் சொற்படி 96 கோடி முறை இராமமந்திரம் சொல்வதையும், உஞ்ச விருத்திக்குச் செல்வதையும் தொடங்கினார்.

1789 – ஆம் ஆண்டு, இவரது 23–வது வயதில் மனைவி பார்வதி இறந்தார். அதனால் மனைவியின் சகோதரியாகிய கமலாம்பாள் என்பவரை 1790 – இல் இரண்டாவது திருமணம் செய்து கொண்டார்.

1802 – இல் குருவின் தந்தையாகிய சொண்டி வெங்கட சுப்பையரின் வீட்டில் சிறந்த இசை நிகழ்ச்சியைச் செய்தார். அதில் பிலகரி ராகத்தில், 'தொருகுணா இடுவம்டி சேவா' என்னும் கிருதியைப் பாடி சமஸ்தான வித்துவான்களால் பெரிதும் போற்றப்பட்டார். இதனை அறிந்த தஞ்சை சரபோஜி மன்னர் தமது சமஸ்தானத்திற்கு தியாகராஜரை அழைத்துப் பாட வைக்க விரும்பினார். ஆனால் தியாகராஜர் நிதிக்காக மனிதனைப் புகழ்ந்து பாட மறுத்து கல்யாணி ராகத்தில், 'நிதிசால சுகமா' என்னும் கிருதியைப் பாடினார். இராமபிரானின் மீது பக்தி கொண்டு, பரம்பொருளையே பாடுபொருளாகக் கொண்டார்.

1804 – இல் தமது 37–வது வயதில் இவரது தாய் சீத்தம்மா இறந்தார். அதனால் தியாகராஜர் மிகவும் மனம் கலங்கினார். அந்த சனவரி மாதத்தில் இவர் வழிபாடு செய்து வந்த இராம விக்கிரகம் காவிரி ஆற்றில் தூக்கிப் போடப்பட்டது. தியாகராஜர் அதே சிந்தனையாகப் பல இடங்களிலும் சிலையைத் தேடி வந்தார். பின்பு மூன்று மாத இடைவெளிக்குப் பிறகு ஏப்ரல் மாதத்தில் ஒருநாள் ஸ்ரீராமன் இவர் கனவில் தோன்றி சிலைகள் இருக்குமிடத்தைக் காட்டினார். இதனால் தியாகராஜருக்கு இராமபக்தி மேலோங்கியது.

1806 - இல் தமது 40–வது வயதில் ஒரு நாள் இவர் வீட்டிற்கு ஸ்ரீராமர், சீதை, அனுமன் ஆகிய மூவரும் வருகை புரிந்தனர். ராமர், சீதை ஆகியோர் வயதானவர்களாகவும், அனுமன் வேலைக்காரனாகவும் வந்து இரவு தங்கிவிட்டு, பொழுது விடியும்பொழுது அங்கிருந்து மறைந்தனர். அந்த அனுபவத்தை நினைத்து தியாகராஜர் மோகனராகத்தில் 'பவனுத' என்னும் கிருதியை இயற்றிப் பாடினார்.

இராம மந்திரத்தைத் தொடர்ந்து 21 ஆண்டுகள் உச்சரித்து 1808 – ஆம் ஆண்டு தமது 42–வது வயதில் பூர்த்தி செய்தார். அதனால் இராமர் அவரது பட்டாபிசேகக் காட்சியைத் தந்தார். 1810–ஆம் ஆண்டு

தியாகராஜரின் மகள் சீதாலட்சுமியின் திருமணம் நடைபெற்றது. இவரது மாணவர் வாலாஜாபேட்டை வெங்கட்ரமண பாகவதர் என்பவர் கோதண்டராமர், சீதையின் படத்தை வரைந்து திருமணப்பரிசாகக் கொண்டு வந்தார். அதனைப் பெற்ற தியாகராஜர் மோகன ராகத்தில் 'நனுபாலிம்ப நடசி வச்சிதிவோ' என்னும் கிருதியை இயற்றிப் பாடினார். 1827 –ஆம் ஆண்டு தமது 60–ஆம் வயதில் 'சஷ்டியப்த பூர்த்தி விழா' நடைபெற்றது.

1839 - ஆம் வருடம் ஏப்ரல் மாதம் திருப்பதிக்குத் தலயாத்திரை சென்றார். அப்பொழுது காஞ்சிபுரம், திருப்பதி, சோலிங்கர், வாலாஜாபேட்டை, சென்னை, திருவெற்றியூர், கோவூர், லால்குடி ஆகிய ஊர்களுக்குப் பயணத்தை மேற்கொண்டார். திருப்பதியில் மூடியிருந்த திரையை விலக்க 'தொரதீயகராதா' என்னும் கிருதியை இயற்றிப் பாடினார். புத்தூரில் நீரில் மூழ்கி இறந்த சேசய்யரை 'நாஜீவாதார நாநேரமுபலமா' என்னும் கிருதியை இயற்றிப்பாடி உயிர்பெறச் செய்தார்.

சென்னையில் கோவூர் சுந்தர முதலியாரின் விருந்தினராக சென்னை, பந்தர் தெரு, 4–ஆம் எண்ணுள்ள வீட்டில் தங்கியிருந்தார். சூன் மாதம் கோவூர் பஞ்சரத்தினத்தை இயற்றிப் பாடினார். பின்பு திருவெற்றியூரில் வீணை குப்பையர் வீட்டில் தங்கியிருந்தார். அங்கு திருவெற்றியூர் பஞ்சரத்தினத்தை இயற்றிப் பாடினார். பின்பு ஸ்ரீரங்கம் சென்று ஸ்ரீரங்கம் பஞ்சரத்தினக் கீர்த்தினையையும், லால்குடிக்குச் சென்று லால்குடி பஞ்சரத்தினக் கீர்த்தனையையும் இயற்றிப் பாடியுள்ளார்.

சூன் மாதம் கோவூரிலிருந்து புறப்படும்பொழுது வழியில் நாகலாபுரம் திருடர்களால் சூழப்பட்டு, இராமன் இலட்சுமணர்களால் காக்கப்பட்டு இறைவனின் தரிசனத்தைப் பெற்றார். 1839 – ஆம் வருடம் அக்டோபர் மாத இறுதியில் தலயாத்திரையை முடித்துக் கொண்டு திருவையாறு சென்றடைந்தார். 1841 – ஆம் வருடம் தமது வீட்டில் கோபால கிருஷ்ண பாரதியைச் சந்தித்தார். 1843 – ஆம் ஆண்டு சட்காலம் கோவிந்தமாரர் இவரது வீட்டிற்கு வருகை புரிந்தபொழுது 'எந்தரோ மகானுபாவுலு' என்னும் கனராக பஞ்சரத்தினக் கிருதியைப் பாடினார்.

இவர் திவ்வியநாமக் கீர்த்தனைகள், உத்சவ சம்பிரதாயக் கீர்த்தனைகள் போன்றவற்றையும், சீதாராம விஜயம், பிரகலாத பக்தி விஜயம், நௌக சரித்திரம் போன்ற இசை நாடகங்களையும், இயற்றியுள்ளார். வான்மீகியின் இராமாயணத்தில் 24,000 சுலோகங்கள் இருப்பதைப் போன்று இவரும் இராமாயணத்தை 24,000 கீர்த்தனைகளில் உருக்கமாகப் பாடியுள்ளார்.

27-12-1846 அன்று இராமபிரான் தியாகராஜரின் கனவில் தோன்றி, இன்னும் 10 நாட்களில் இவருக்கு மோட்சத்தை வழங்குவதாகக் கூறினார். இதனைத் தியாகராஜர் 28–12–1846 அன்று நடைபெற்ற ஏகாதசி பஜனை நிகழ்ச்சியில் தமது மாணவர்களுக்கும் உறவினர்களுக்கும் அறிவித்தார். 6–1–1847 அன்று வரும் புஷ்ய பகுள பஞ்சமி தினமே இவரது முக்தி நாளாக அனைவரும் அறிந்தனர். 5–1–1847 அன்று தியாகராஜர் சன்னியாச வாழ்க்கையை மேற்கொண்டு, தமது பெயரை 'நாதப் பிரம்மானந்தர்' என்று வைத்துக் கொண்டார். பின்பு 6–1–1847 அன்று தம்முடைய 80–ஆம் வயதில் நண்பகல் 12 மணிக்கு சத்குரு தியாகராஜர் முக்திநிலையை அடைந்தார்.

சங்கீத மும்மூர்த்திகளில் முதன்மையானவரும் முக்கியமானவரும் தியாகராஜரே ஆவார். இவருடைய கீர்த்தனைகளில் இசை பாவமும், சாகித்திய பாவமும் நிறைந்து காணப்படுகின்றன. இவரிடம் நூற்றுக்கணக்கான மாணவர்கள் இசைப்படித்துள்ளனர். இன்று உலகம் முழுவதும் சத்குரு தியாகராஜருடைய கிருதிகள் பாடப்பட்டு வருகின்றன.

# 2. தியாகராஜரின் சாத்வீகக் குணம்

ஸ்ரீ தியாகராஜரின் உலகளாவிய இசைப் புகழுக்கு அடிப்படைக் காரணமாக இருப்பது அவரது சாத்வீகக் குணமே என்பதை நாம் மறைக்கவோ அல்லது மறுக்கவோ முடியாது. தியாகராஜர் எத்தகைய சூழ்நிலையில் இவ்வுலகில் வந்து பிறந்தார் என்பதை நாம் நினைத்துப் பார்க்க வேண்டும்.

தியாகராஜரின் தந்தைக்கு இராமப்பிரம்மம் என்று பெயர். அம்மாவிற்குச் சீத்தம்மா என்று பெயர். இந்தத் தம்பதிகளுக்கு ஏற்கெனவே மகன்களாகப் பஞ்சாபகேசன், இராமநாதன் என்று இரண்டு முரட்டுப் பிள்ளைகள் பிறந்திருந்தனர். இப்பிள்ளைகளிடம் இயற்கையாகவே துடுக்குத்தனம் மிகுந்திருந்தது. இவர்கள் புரிந்த அட்டூழியங்கள் அயலாரை அலற வைத்தன. அண்டை வீட்டாரின் புகார்களைக் கேட்டு மனம் உடைந்து அவர்களை அடக்க வழியறியாது தவித்தனர் பெற்றோர். எனவே திருவாரூர்த் தியாகராஜப் பெருமானிடம் வேண்டி, எங்களுக்கு ஒரு சாத்வீகமான பிள்ளை பிறக்கக் கூடாதா என்று கெஞ்சினர்.

அவர்களின் வேண்டுதல் வீணாகப் போகவில்லை. அவர்களின் கனவில் வந்த திருவாரூர்த் தியாகராஜப் பெருமான், 'உங்களுக்கு நாரத அம்சமாக நல்லதொரு குழந்தை பிறப்பான். அவனுக்குத் தியாகராஜன் என்று எனது பெயரை வைத்து வளர்ப்பீர்களாக' என்று கூறி மறைந்தார். இறைவனின் கட்டளைப்படியே அவர்களுக்கு அடக்கமும், எளிமையும், சாந்தமும், நல்ல சாரீரமும், உயர்ந்த கற்பனைத் திறமும் கொண்ட 'கருவில் திருவுடைய' சாத்வீகமான பிள்ளை ஒன்று தோன்றியது.

### *தியாகராஜரின் பிறப்பு*

தியாகராஜர் சர்வஜித்து வருஷம், சித்திரை மாதம் 25–ஆம் தேதி திங்கட்கிழமை அதாவது 1767–ஆம் ஆண்டு , மே மாதம், 4 – ஆம் தேதி பூச நட்சத்திரம் கடக லக்கினத்தில், உச்சிப்பொழுது சரியாக 12 மணிக்குப் பிறந்தார். இவருடைய ஜாதகத்தைக் கணித்த 'பொட்டி ஜோஸ்யுலு' என்ற ஜோதிடர் அப்பொழுதே 'இவன் வருங்காலத்தில் தன்னுடைய சாத்வீகக் குணத்தினால் உலகப்புகழ் பெறப் போகின்றான்' என்று கூறினார்.

தியாகராஜர் 'தெலுங்கு பிராமண' இனத்தைச் சேர்ந்தவர். முலக நாடு வகுப்பில், காகர்ல வமிசத்தில், பரத்வாஜ கோத்திரத்தில், ஆபஸ்தம்ப சூத்திரத்தில் தோன்றியவர்.

தியாகராஜருடைய முப்பாட்டனாருக்குப் பெயர் பஞ்சாண்டப் பிரம்மம் என்பது. அவருக்கு சதாசிவபிரம்மம், சதானந்த பிரம்மம், சச்சிதானந்த பிரம்மம், பாலப்பிரம்மம், கிரிராஜப்பிரம்மம் என்று மொத்தம் ஐந்து பிள்ளைகள் இருந்தார்கள். இதில் கடைசிப் பிள்ளையாகிய 'கிரிராஜக் கவி' தான் தியாகராஜருடைய பாட்டனாராவார். இவர் சிறந்த வாக்கேயக்காரர்; மாத்ரு பூதேஸ்வரப் பெருமானின் பரம பக்தர்; தெலுங்கு, வடமொழியில் புலமை மிக்கவர்; தஞ்சை மராட்டிய மன்னரான சகாஜியால் பெரிதும் ஆதரிக்கப்பட்டவர்; அவரது சமஸ்தானப் புலவர்; வேதாந்த விசயங்களையும் பக்திரசத்தையும் குழைத்துப் பல கீர்த்தனைகளைத் தெலுங்கு மொழியில் இயற்றியவர்; 'சாஹேந்திர சரித்திரம், லீலாவதிக் கல்யாணம்' போன்ற யட்சகான நாடகங்களையும் 'ராமமோகனம்' என்ற குறவஞ்சி நாடகத்தையும் இயற்றியவர்.

*தியாகராஜரின் குடும்பம்*

இந்த கிரிராஜகவிக்கு மொத்தம் ஐந்து பிள்ளைகள் இருந்தார்கள். இதில் கடைசியாகப் பிறந்தவர் இராமப்பிரம்மம். இந்த இராமப்பிரம்மம் தான் தியாகராஜருடைய தந்தையாவார். இவரும் வடமொழி, தெலுங்கு மொழியில் புலமைமிக்கவர்; மருதாநல்லூர் திருமடத்தின் காவலரான மகான்மூலம் 'ஸ்ரீராம தாரக மந்திரத்தை' உபதேசிக்கப்பெற்றவர்; தஞ்சை துளஜாஜி மகாராஜாவின் சமஸ்தானப்புலவர்; சமஸ்தானத்தில் 24 முறை வான்மீகி இராமாயணத்தில் பிரசங்கம் செய்து மன்னரால் பாராட்டும், பரிசிலும் அளிக்கப் பெற்றவர்.

தாயார் சீத்தம்மா புகழ்பெற்ற இசை மேதையாகிய வீணை இராமகாளாஸ்திரி ஐயரின் மகளாவார். தியாகராஜரின் பிற்காலப் புகழுக்கு மெருகூட்டிய 'நாரதீயம்'போன்ற இசைநூல்கள் இவரிடமிருந்து தான் கிடைக்கப்பெற்றுள்ளன. எனவே ஒரு நல்ல பாரம்பரியமான, சாத்வீகமான குடும்பத்தில் பிறந்தவர் நமது தியாகராஜர்.

## *தியாகராஜரின் இளமைக்காலம்*

தியாகராஜர் இளமையில் நன்றாக வளர்ந்தார். ஆறு வயதில் உடல் நலக்குறைவாக இருந்த அவர் பின்பு நல்ல திடகாத்திரமாக மாறிவிட்டார். எட்டு வயதில் 'உபநயனம்' செய்விக்கப்பட்டு, தந்தையால் 'ஸ்ரீராம தாரக மந்திரம்' உபதேசம் செய்யப்பெற்றார். தந்தையுடன் வான்மீகி இராமாயணம் பிரசங்கங்களுக்கு அடிக்கடி சென்று வந்ததால் காவியப் பயிற்சியும், வடமொழிப் புலமையும் அவரிடம் வளரலாயின. மேலும் அவர் அரசரின் 'வடமொழிக் கல்வி நிலையத்தில்' கல்வி கற்றுத் தேறினார்; தாயிடம் இசைப் பயிற்சியைப் பெற்றார்.

தியாகராஜர் குழந்தையாக விளையாடும்பொழுதே ஸ்ரீராமரின் நினைவாக இருந்து வந்தார். காஞ்சிபுரத்திலிருந்து திருவையாற்றுக்கு வந்திருந்த இராமகிருஷ்ணானந்தர் என்னும் சன்யாசி நமது தியாகராஜருக்கு 'ஸ்ரீராம ஷடாட்சர மந்திரத்தை உபதேசம்' செய்து, அவருள் அடங்கிக் கிடந்த ஆன்மீக அனலை மூட்டினார். அதனால் தியாகராஜர் ஸ்ரீராம பக்தியில் மூழ்கி, எங்கும் எதிலும் ஸ்ரீராம பக்தியையே காண முற்பட்டார். அவரது குடும்பம் பரம்பரையாகப் போற்றிப் பூஜிக்கும் இராம விக்கிரகத்தைத் தகப்பனார் ஆராதிக்கும்பொழுது இவரும் கூடவேயிருந்து பயபக்தியுடன் வணங்கி, ஒத்தாசை புரிந்து வந்தார்; அப்பொழுது தன் தந்தையிடம் அனுமதி பெற்றுக் கவிபாடி இராமனைத் துதிக்கத் தொடங்கினார்.

## *தியாகராஜரின் முதல் பாடல்*

'நமோ நமோ ராகவாய அனிசம்' என்ற் தேஷ்யத் தோடி ராகமே தியாகராஜரின் முதல் பாடலாகும். இது போன்று வடமொழியில் பல 'திவ்யநாமக் கீர்த்தனைகளை' இயற்றத் தொ டங்கினார். தியாகராஜர் தமது வீட்டுச் சுவர்களிலும், பிற இடங்களிலும் சுண்ணாம்புக் கட்டியாலும், கரிக்கட்டியாலும் தனது சாகித்யங்களை எழுதுவது வழக்கம். தந்தை இராமப்பிரம்மம் அவற்றையெல்லாம் கவனித்து, தமது தவப்புதல்வனின் கூரிய மதிநுட்பத்தை வியந்து, கவனமாக அவற்றையெல்லாம் எழுதி வைத்துத் தியாகராஜரை ஊக்கப்படுத்தி வந்தார். அதனால் தான் 'இவன் தந்தை எந்நோற்றான் கொல்' எனும் சொல்லை நாம் இராமப் பிரம்மத்துக்கே இன்றும் உரிமையாக்கிக் கொண்டிருக்கின்றோம்.

*திருவையாற்றுக்கு வந்து தங்குதல்*

தியாகராஜர் சிறுவனாக இருந்தபொழுது தந்தை இராமப்பிரம்மம் தம் குடும்பத்தோடு காசிக்குத் தலயாத்திரை சென்று வரவேண்டும் என்று திருவாரூரிலிருந்து புறப்பட்டார். ஒரு நாள் இரவு திருவையாறு சென்று தங்கினார். அன்று அவரது கனவில் தோன்றிய இறைவன் 'காசிக்கு வீசம் பெரிது திருவையாறு' என்பதைக் கூறித் திருவையாற்றிலேயே தங்கும்படி கட்டளையிடுகின்றார். இந்தச் செய்தியை அறிந்து துளஜாஜி மகாராஜா பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார். திருமஞ்சன வீதியிலிருந்த ஒரு வீட்டையும், ஒரு வேலி நிலத்தையும் அவர்களுக்குக் காணிக்கையாக வழங்கித் திருவையாற்றிலேயே நிரந்தரமாகத் தங்குவதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்தார்.

திருவையாற்றில் வந்து தங்கிய பிறகு, தியாகராஜருக்கு இசையில் மிகுந்த நாட்டம் ஏற்பட்டது. அந்த ஊரிலேயே வடக்கு மாட வீதியில், 86 – ஆம் எண்ணுள்ள வீட்டில், சொண்டி வெங்கடரமனய்யர் என்ற தஞ்சாவூர் சமஸ்தான வித்துவான் ஒருவர் தங்கி இருந்தார். அவருக்கு வீணை வாசிப்பதிலும், பாடுவதிலும் மிகுந்த புலமை உண்டு. இலட்சிய சங்கீதத்திலும், இலட்சண சங்கீதத்திலும் கைதேர்ந்த வித்துவானாக இருந்தார். எனவே, அவரிடத்தில் நம் தியாகராஜரை சங்கீதம் படிப்பதற்காக அவரது பெற்றோர் அனுப்பி வைத்தனர். அப்பொழுது தியாகராஜருக்குச் சரியாக வயது பதினாறு இருக்கும். அவரிடம் சரியாக ஒரே ஒரு வருடம் தான் இசையைப் பயின்றார். அதற்குள் தியாகராஜர் சங்கீத இலட்சணங்கள், இராக ஆலாபனை, பல்லவி, தாள நுணுக்கம் ஆகியவைகளை எல்லாம் கற்றுத் தேர்ச்சி பெறுகின்றார். பின்பு பல இடங்களுக்குச் சென்று இசை நிகழ்ச்சிகளைச் செய்து வருகின்றார்.

*'நாரதீயம்' ஓலைச்சுவடி*

அச்சமயத்தில் தியாகராஜரின் தாய்வழிப் பாட்டனாராகிய வீணை இராம காளாஸ்திரி அய்யர் காலமானார். அம் மகாவித்துவானின் வீட்டிலிருந்து 'நாரதீயம்' என்ற அரிய சங்கீத ஏடுகளைப் பெறும் வாய்ப்பு இவருக்குக் கிடைக்கின்றது. ஆனால் அந்த மூல ஏடுகளிலிருந்த ரகசிய அர்த்தங்கள் இவருக்கு விளங்காமல் போகவே மிகவும் குழப்பமடைகின்றார்.

அப்பொழுது தற்செயலாகச் சந்தித்த இராமகிருஷ்ணானந்தர் இவருக்குப் புதிய வழியைக் காட்டிப் புத்துணர்ச்சியை ஊட்டுகின்றார். தியாகராஜருக்கு நாரத மந்திரத்தையும் உபதேசித்து, நாரதரைத் தீவிரமாக உபாசிக்கும் நன்முறைகளைக் கற்றுக் கொடுக்கின்றார். விடாமுயற்சியால் தியாகராஜர் திருவினைக் காண்கின்றார்.

ஒரு நாள் காலையில் தியாகராஜர் எண்ணெய் தேய்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார். அப்பொழுது நாரத முனிவர் ஒரு சன்னியாசியைப் போல் வேடம் பூண்டு இவரது வீட்டுக்கு வருகின்றார். 'இங்கு யாரோ தியாகராஜர் என்று ஒரு சங்கீத வித்துவான் இருக்கிறாராம். அவரது பாட்டை கேட்க வேண்டுமென்று எனக்கு விருப்பமாக இருக்கின்றது' என்று கூறுகின்றார். இதனைக் கேட்ட தியாகராஜர், எண்ணெய்க் குளியலுக்காகக் காத்திருந்த போதிலும், அம்முனிவரை வணங்கி, அருகில் அமரச் செய்து சுமார் ஒன்றரை மணிநேரம் அவர் முன்னால் பாடிக் காட்டினார். இதனால் நாரத முனிவருக்கு மிகவும் சந்தோஷம். 'தியாகராஜருக்குச் சமமாகச் சங்கீத கான ரசத்தை அறிந்தவர் இந்த உலகத்தில் யாருமில்லை' என்று வாழ்த்தி; 'இந்தப் புத்தகம் உன்னிடத்தில் இருக்கட்டும்; நான் நித்திய கர்மானுஷ்டானத்தை முடித்துக் கொண்டு திரும்ப பிட்சைக்கு வரும்பொழுது இதனைப் பெற்றுக் கொள்கிறேன்' என்று கூறிவிட்டு அங்கிருந்து மறைந்து விடுகின்றார்.

### *'ஸ்வரார்ணவம்' ஓலைச்சுவடி*

அன்று நெடுநேரமாகியும் அந்தச் சன்னியாசி தாம் கூறியவாறு திரும்பி வரவில்லை. இதனால் நமது தியாகராஜர் பல இடங்களில் தேடியும் அவரைக் காணாததால் மனம் சஞ்சலப்படுகின்றார். அன்று சூரியன் மறையும் வரை ஆகாரமில்லாமலேயே காத்துக் கொண்டிருந்தார். பின்பு இரவு பூஜை முடிந்த பிறகு தூங்க முற்பட்டார். அப்பொழுது அவரது கனவில் தோன்றிய நாரதமுனிவர் பகலில் சன்னியாசியாக வந்தது தாமே என்பதை உணர்த்தினார். "நான் உனக்குக் கொடுத்த புத்தகம் 'ஸ்வரார்ணவம்' என்ற சங்கீத இலட்சண கிரந்தமாகும். இதுவரை இதனை இவ்வுலகில் யாரும் அறியார். உன்னையன்றி மற்றெவரும் இதனைப் பார்க்கத் தக்கருமல்ல. எனவே உன் மூலமாய்ச் சங்கீதம் இவ்வுலகில் பிரசித்தி அடைய

வேண்டுமென்றே நான் இந்த 'ஸ்வரார்ணவத்தை' உனக்குக் கொடுத்துள்ளேன். இனி 'நாரதீயம்' என்ற நூலில் உனக்கிருக்கும் ரகசிய அர்த்தங்களுக்கு விடை கிடைக்கும்'' என்று கூறிவிட்டு மறைந்தார்.

பொழுது விடிந்த பிறகு புத்தகத்தை எடுத்துப் பார்த்தபொழுது தியாகராஜர் கனவில் கண்டவாறே எல்லா உண்மைகளும் விளங்கக் கண்டார். அவருக்கு மகிழ்ச்சி வெள்ளம் கரைபுரண்டு ஓடுகின்றது. உடனே அவர் 'நாரத குரு ஸ்வாமி' என்ற தர்பார் ராகக் கீர்த்தனையும், 'ஸ்ரீ நாரத நாதஸர ஸிருக' என்ற கானடா ராகக் கீர்த்தனையும் 'நாரத கானலோலா' என்ற அடானா ராகக் கீர்த்தனையும் இயற்றிப் பாடித் தமது மகிழ்ச்சியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொண்டார்.

அந்த 'ஸ்வரார்ணவம்' என்ற அற்புதமான நூலிலிருந்த இராக கமகங்களை வெளிப்படுத்தியே தியாகராஜர் பல அபூர்வ ராகங்களிலும், மேளகர்த்தா ராகங்களிலும், சங்கீத இலட்சணம் தவறாமல் பல்லாயிரக்கணக்கான பக்திமயமான கீர்த்தனைகளைச் செய்து பரமானந்தம் அடைகின்றார்.

தியாகராஜர் நினைத்திருந்தால் அவரது கிருதிகளைத் தம்மை நோக்கிப் படையெடுத்த நடன மாதர்களுக்குக் கற்றுக் கொடுத்தே பெருஞ்செல்வத்தைக் குவித்திருக்கலாம். ஆனால் அவர் பணத்திற்காகப் பாடவில்லை. மேலும் அவர் தம்மை நாடிவந்த மன்னர்களையும், செல்வர்களையும் புகழ்ந்து பாடியே ஆடம்பரமான வாழ்க்கையை நடத்தி இருக்கலாம். ஆனால் அவர் மனிதனுக்காகப் பாடவில்லை.

*மகாத்மாவின் சிறப்பு*

ஸ்ரீ தியாகராஜர் கடைப்பிடித்தது எல்லாம் சாத்வீகமான வாழ்க்கை முறையைத்தான். 'உஞ்சவிருத்தி' என்னும் எளிய தத்துவம் ஒன்றைத்தான் அவர் விரும்பினார். இவ்வளவு இசைவளம் பொருத்திய ஒரு மகான் தெருத்தெருவாக வீடு வீடாகச் சென்று, ஆண்டவனைப் பாடி, இரந்து கேட்டு 'உஞ்சவிருத்தி' பெற்று இன்புற்று வாழ்ந்தது நமக்கு வேண்டுமானால் அதிசயமாக இருக்கும். ஆனால் எளிய வாழ்க்கையினால்தான் ஆண்டவனிடம் உண்மையான பக்தியும், மனதிற்கு அமையும் கிடைக்கும் என்பது மகான்களின் சரித்திரங்களில் காணப்படும் உண்மை நிலையாகும்.

'எவன் ஒருவன் ஏழைகளுக்காகக் கண்ணீர் வடிக்கின்றானோ அவனே மகாத்மா' என்றார் விவேகானந்தர். நாம் எளிமையின் சின்னமாக விளங்கிய மகாத்மா காந்தியைத் தான் 'மகாத்மா' என்போம். ஆனால் அவருக்கும் முன்னவராக விளங்கியவர் நமது மகாத்மா 'ஸ்ரீ தியாகராஜர்'. ஏழ்மையை உணர்வதற்காக, ஏழையாகவே வாழ்ந்து காட்டியவர் நம் தியாகராஜர் ஆவார்.

*சாத்வீகத் தோற்றம்*

தியாகராஜரின் தெய்வீகமான உருவத்தை நாம் அப்படியே நம் கண்முன்னால் கொண்டு வரமுடிகின்றது. அவரது ஒல்லியான நெடிய உருவம் சரியாக 5 அடி, 9 அங்குலம் உயரம் இருக்கும். அவர் நல்ல மாநிறம் கொண்டவர்; பரந்த தோள்களை உடையவர். இசையால் இராமபிரானின் அருளை நாடும் தெய்வீகக்களை பொருந்திய 'சாத்வீகமான' முகம் அவருடையது. அகலமான நெற்றி. அதில் பளிச்செனத் துலங்கும் கோபி நாமம். சதைப் பற்றுடன் கூடிய தாடை. முகத்தின் முன்னால் சிறிது கூம்பியுள்ள முகவாய்க் கட்டை (Little Pointed at the chin) நீண்ட கழுத்து. இராமனின் புகழை இனிமையாகப் பாடும் நல்ல சாரீரம். கழுத்தில் துளசி மணிமாலை. ஜெபமாலை தாங்கிய வலதுகரம். இடது கையில் சிப்ளாக்கட்டை. ஆள்காட்டி விரலில் பளிச்சிடும் மோதிரம். பவித்திரம் அணிந்த மோதிர விரல். மார்பினில் புரளும் புனிதப் பூணுல். பட்டுக்கரையுடன் கூடிய வெண்மையான அங்க வஸ்திரத்தை விரித்து, முதுகை முழுவதுமாக மறைக்குமாறு போர்த்திக் கொண்ட தோற்றம். தலையில் சிவப்பு நிறத்தில் பட்டுத்துணியைத் தலைப்பாகையாக அணிந்து தனி அழகுடன் விளங்கும் காட்சி. தலைப்பாகையின் தொடர்ச்சியாக முதுகில் வாலென மடிப்புக் கலைந்து நெளியும் அழகு. அனைத்திற்கும் மேலாக அந்த உருவத்துக்கே உயிர்களையூட்டும் பிரகாசமான, காண்போரை ஊடுருவிப்பாயும் சாத்வீகமான கண்கள், இவைகளே கூறிவிடும் நம் தியாகராஜரின் சாத்வீகக் குணத்தை.

ஒருநாள் தியாகராஜர் உஞ்சவிருத்தியில் பாடிக் கொண்டே முன்னால் செல்கின்றார். அவரது மிகப்பெரிய சிஷ்யப்பட்டாளம் பின்னால் பாடிக் கொண்டே வந்தது. ஓர் இடத்தில் தியாகராஜர் திமிர்பிடித்த ஒரு

பணக்காரனுடைய அன்பளிப்பை ஏற்க மறுத்ததால் அவனுடைய கோபத்துக்குள்ளாகி, அவனிடம் அடியும் உதையும் பட நேர்ந்து விடுகின்றது. குருவை அடிக்கத் துணிந்தவனை நையப் புடைக்க சிஷ்யப் பட்டாளம் துடித்து எழுகின்றது. ஆனால் அவர்களையெல்லாம் தடுத்து நிறுத்திய தியாகராஜர், 'இது இராமனின் செயலன்றி வேறொன்றுமில்லை' என்று அவர்களுக்கெல்லாம் சமாதானம் கூறிவிட்டு 'உஞ்ச விருத்தியில்' தொடர்ந்து பாடிக்கொண்டே செல்கின்றார். இந்த நிகழ்ச்சி பின்னால் ஊருக்கும், உலகுக்கும் தெரிய வந்த போது தியாகராஜரின் சாத்வீகக் குணத்தை எல்லோரும் பாராட்டினார்கள். அவர் இறந்த பிறகு **1961–**ஆம் வருடம், ஜனவரி மாதம், **6 –** ஆம் தேதி அவரது சமாதியில் **115 –** வது ஆண்டு ஆராதனை விழாவைக் கொண்டாடும் பொழுது இந்திய அரசாங்கம் ஸ்ரீ தியாகராஜரின் திருவுருவத்தினை அஞ்சல் தலையாக வெளியிட்டுச் சிறப்பித்தது. எனவே தியாகராஜர் பல்லாயிரக்கணக்கான இசை உருப்படிகளை இயற்றிப்பாடி இசை உலகில் நீங்காப் புகழ் பெற்றிருந்தாலும், அவரை நினைக்கும் பொழுது, அவரது சாத்வீகக் குணமே நம் எல்லோரின் கண் முன்னாலும் நிலைத்து நிற்கின்றது.

# 3. தியாகராஜரின் இராம பக்தி

ஸ்ரீ தியாகராஜரின் உலகளாவிய இசைப் புகழுக்கு அடிப்படைக் காரணமாக இருப்பது அவரது இராமபக்தியே என்பதில் மாறுபட்ட கருத்துகள் இருக்க முடியாது. தியாகராஜர் ஸ்ரீராமனையே துதித்து, ஸ்ரீ ராமனையே சுவாசித்து, ஸ்ரீராமனின் திருப்பாதங்களில் இரண்டற ஒன்றிக் கலந்து விட்டார். இவர் ஆண்டாள், கபீர்தாஸ், மீராபாய், இராமதாசர், வரிசையிலே வைத்துப் போற்றப்பட வேண்டியவர். பத்ராசலம் இராமதாசரை மானசீகக் குருவாகக் கொண்டு இராமபக்தியில் திளைத்து, ஸ்ரீராமனின் பாதார விந்தங்களில் கலந்தவர். அதனால்தான் நாம் இன்றும் அவரைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கின்றோம்.

*தியாகராஜரின் முன்னோர்கள்*

பதினாறாம் நூற்றாண்டில் தஞ்சாவூரில் வாழ்ந்த இராமகாளாஸ்திரி ஐயர் என்பவரே இந்த வம்சத்திற்கு ஆணி வேராவார். இவர் வீணை வாசிப்பதிலும், சங்கீதம் பாடுவதிலும் மிகப்பெரிய வித்துவானாக விளங்கியிருக்கின்றார். இவர் தியாகராஜரின் தாய்வழிப் பாட்டனாராவார். இவரிடம் வீணைப் பெருமாள் ஐயர், தீபாம்பாள்புரம் கஸ்தூரி ரெங்கையர், சௌக்கம் வீரபத்திர ஐயர், சௌக்கம் சீனிவாச ஐயர், சொண்டி வெங்கடசுப்பையர், அவரது மகன் சொண்டி வெங்கடராமணையர் ஆகியோர் சங்கீதம் படித்து மிகப்பெரிய மேதைகளாகவும் அரண்மனை வித்துவான்களாகவும் வாழ்ந்திருக்கின்றனர். இந்தச் சொண்டி வெங்கடரமணையரிடம் தான் நமது தியாகராஜர் இசையைப் படித்துள்ளார். சரியாக ஓர் ஆண்டிற்குள் "ஏக சந்தக் கிராகியாகி" சங்கீத இலட்சியங்களையும், இலட்சணங்களையும் நன்கு கற்றுத் தேர்ந்துள்ளார்.

*தியாகராஜரின் அரங்கேற்றம்*

தியாகராஜர் இராகபாவம் ததும்பும் பல கருத்துக்களை அமைத்து, மனத்தைக் கவரும் வர்ண மெட்டுக்களில் பாடி, தமது திறமையை வெளிக் காட்டினார். ஒரு நாள் அவரது குரு சொண்டி வெங்கடரமணைய்யர் சிறந்த வித்துவான்களடங்கிய சிறு சபையைக் கூட்டி, எளிய முறையில் சிஷ்யனுக்கு அரங்கேற்றம் செய்ய ஏற்பாடு செய்திருந்தார். அன்று 'ஜானகி ரமணா' என்ற

சுத்த சீமந்தனி ராகக் கிருதியை தியாகராஜர் மிகவும் சிறப்பாகப் பாடினார். பின்பு பிலகரி ராகத்தில் தாம் இயற்றிய 'தொருகுனா இடுவம்டி சேவா' என்னும் பெரிய உருப்படியை அனைவரும் மெச்சும் படியாகப் பாடி, அதன் கடைசி சரணத்திலுள்ள 'காமித பல தாயகி'' என்னும் வரியை நிரவலாக, விஸ்தாரமாகக் கானம் செய்து, கேட்போரை அசையாப் பதுமைகளாக மெய்மறந்து போகும் படி செய்தார்; எல்லோரையும் இசையால் கட்டுண்டு கிடக்கச் செய்தார். இதனால் குரு வெங்கடரமணையருக்குப் புளகாங்கிதமாக இருந்தது. தாவி வந்து அப்படியே தியாகராஜரைக் கட்டித்தழுவிக்கொண்டு, நாத் தழுதழுக்க 'தொருகுனா இடுவம்டி சிஷ்யிடு' என்றார். 'இத்தகைய அருமைச்சீடன் யாருக்குக் கிடைப்பான். நான் மிகவும் கொடுத்து வைத்தவன்' என்று மெச்சியவாறே தமது கைகளில் அணிந்திருந்த தோடா, மகரகண்டி ஆபரணங்களைக் கழற்றித் தியாகராஜருக்கு அரங்கேற்றப் பரிசுகளாகத் தந்து சிஷ்யனின் இசைப் புலமைக்கு முத்திரையிட்டார்.

எளிய முறையில் அறையில் நடந்த அரங்கேற்றம் அமோக வெற்றி தந்தவுடன், அரண்மனை வித்துவான்கள் ஏராளமாகக் கூடிய அம்பலத்தில் நமது தியாகராஜரின் புகழ் மணத்தைப் பரப்ப ஏற்பாடு செய்கின்றார் குரு.

தஞ்சாவூரில், சொண்டி வெங்கடசுப்பையர் வீட்டில் கூடிய வித்வத் சபையானது இசை வெள்ளத்தில் மிதக்கத் தொடங்கியது. தியாகராஜர் தாம் இயற்றிய "மரிமரி நின்னே மொரலிட, மனசுன தயராது" என்னும் காம்போதி ராகக் கிருதியை இரவு நெடு நேரம் வரை விஸ்தாரமாகப் பாடிக் கொண்டே இருந்தார். கானத்தில் நிரவலும், கற்பனை சுரமும் அமுதமெனப் பொங்கி வழிந்து சபையினரைப் போதையிலாழ்த்தின. மெய்மறந்த நிலையில் அரண்மனை வித்துவான்கள் தங்களுக்கிருந்த முக்கியமான வேலைகளையும் மறந்து விட்டுத் தியாகராஜருக்கு 'சபாஷ்' போட்டு மகிழ்ந்து கொண்டிருந்தனர். குருவான சொண்டி வெங்கடரமணைய்யாவும் கானத்தில் சொக்கிய நிலையில் தம் சிஷ்யனுக்குச் சம அந்தஸ்தில் ஆசனம் அளித்ததுடன், 'இனி இவனுக்குக் குருவென்று இருக்க எனக்கு அருகதையில்லை' என்று உணர்ச்சி பொங்கக் கூறினாராம்.

*ராம மந்திரம் உச்சரித்தல்*

தியாகராஜர் தமது இருபதாம் வயதில் தந்தை இராமப்பிரம்மத்தை இழக்கின்றார். அதனால் மனம் மிகவும் சஞ்சலப்படுகின்றார்; வாழ்க்கையின் நிலையாமையைப் பற்றிச் சிந்திக்கின்றார். அந்த நேரத்தில் தான் காஞ்சிபுரத்தில் இருந்து வந்த இராமகிருஷ்ண யதீந்திரர் இவருக்கு ஞானோபதேசம் செய்வித்து இராமநாம மந்திரத்தை 96 கோடி தடவை ஜபம் செய்யுமாறு கூறிவிட்டுச் செல்கின்றார். இதனால் தியாகராஜர் தமது குடும்பச் சொத்தான சீதா, ராம, லட்சுமண விக்கிரகங்களை வைத்து ராம நாம ஜபத்தைத் துவங்குகின்றார். ஒரு மணி நேரத்திற்கு 7,000 நாமங்கள் வீதம், ஒரு நாளொன்றுக்கு 1,25,000 நாமங்கள் வீதம், 21வருடங்களுக்குத் தொடர்ந்து பூஜை செய்து, 96 கோடி இராம நாமத்தை நிறைவு செய்கின்றார்.

*ராமர் காட்சி அளித்தல்*

நமது தியாகராஜர் எத்தனை முறை ஸ்ரீராமரைத் தரிசனம் செய்துள்ளார் தெரியுமா? நேரடியாக இரண்டு முறையும், கனவில் இரண்டு முறையும் என்று மொத்தம் நான்கு முறை அவர் ஸ்ரீராமரைத் தரிசனம் செய்துள்ளார்.

தியாகராஜர் வாரத்திற்கு ஒரு முறை உஞ்ச விருத்திக்குச் செல்வது வழக்கம். அதில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டு தமது குடும்பத்திற்கும், தமது சிஷ்யப்பட்டாளத்திற்கும், தமது வீட்டிற்கு வந்து தங்கும் சங்கீத வித்துவான்கள், பண்டிதர்கள், பாகவதர்கள் போன்ற விருந்தினர்களுக்கும் உணவளிப்பது வழக்கம். இவ்வாறு இருக்கையில் தியாகராஜர் தமது முப்பத்தேழாம் வயதில் தாய் சீத்தம்மாவையும் இழக்க நேரிட்டது.

நிலையற்ற மனித வாழ்வில் விரக்தியடைந்து நிர்க்கதியாக நின்ற நம் தியாகப்பிரம்மம் இறுதியில் இராமனே கதியென்று சரண் புகுந்தார். எந்நேரமும் இராமனின் புகழையே பாடி, பஜனை செய்து கொண்டிருந்தார். சரபோஜி மகாராஜாவைப் புகழ்ந்து பாடிப் பெருஞ்செல்வத்தைச் சேர்க்க விரும்பாத தம் தம்பியின் மீது கோபம் கொள்கின்றார் பஞ்சாபகேசன். தியாகராஜரின் இராம பக்திக்கும், இசையுணர்வுக்கும் மூல காரணமாக விளங்கிய அந்த ஸ்ரீராம லட்சுமண விக்கிரகங்களை இரவோடு இரவாகத்

தூக்கிக் காவிரி ஆற்றில் எறிந்து விடுகின்றார். விக்கிரகங்களைக் காணாத நம் தியாகராஜர் 'தாயை இழந்து அனாதையாக விடப்பட்ட குழவி போலத்' துடிதுடிக்கின்றார். ஊரிலுள்ள கிணறுகளிலும், குளங்களிலும் நன்கு தேடிப்பார்த்தும் எங்கும் கிடைக்கவில்லை. இதனால் கவலையடைந்த நம் தியாகராஜர் உண்ணவும், உறங்கவும் கூட மறந்து விடுகின்றார். தமது வீட்டை விட்டு வெளியில் சென்று சிஷ்யர்களின் வீடுகளில் கூடப்போய் தங்குகின்றார். சிவராத்திரி பூஜைக்கு மனம்புச்சாவடி வெங்கட சுப்பையரின் வீட்டிற்குச் சென்று தங்குகின்றார். பங்குனி உத்திரம் விழாவிற்கு அவர் தமது பிறந்த ஊரான திருவாரூருக்குப் போய்த் தங்குகின்றார். மூன்று மாத அலைக்கழிப்புக்குப் பின்பு ஒரு நாள் இராமபிரான் நமது ஸ்ரீதியாகராஜரின் கனவில் தோன்றி சிலைகள் இருக்கும் இடத்தைக் கூறுகின்றார். திருமஞ்சன வீதியின் தென் கரையிலுள்ள காவிரியாற்றிலிருந்து மீண்டும் சிலைகள் கண்டெடுக்கப்படுகின்றன. தியாகராஜர் அடுத்த முறை ஸ்ரீராமனை நேரிலேயே காணும் பாக்கியத்தைப் பெறுகின்றார். அப்பொழுது அவருக்கு வயது நாற்பது இருக்கும். ஒரு நாள் இரவு சரியாகப் பத்து மணி இருக்கும். அப்பொழுது எல்லோரும் உண்டு முடித்து உறங்கச் செல்லும் நேரம். அந்த நேரத்தில் ஒரு முதியவரும், அவர் மனைவியும், மற்றும் வேலைக்காரனுமாக மூன்றுபேர் தலையில் சுமையுடன் வீட்டுக்கு உள்ளே வருகின்றனர். தியாகராஜர் அவர்களுக்கெல்லாம் உணவளிக்க வழியில்லையே என்று கலங்குகின்றார். ஆனால் அந்த முதியவர், தங்களிடம் எல்லாப் பொருள்களும் இருப்பதாகக் கூறி, அவற்றை வேலையாளிடம் கொடுத்துச் சமைக்கும்படி உத்தரவிடுகின்றார்.

சமையல் முடியும் வரை வயதான தம்பதியர் தியாகராஜரிடம் பேசிக் கொண்டே இருந்தனர். உணவு தயாரானதும் இறைவனுக்கு நைவேத்தியம் செய்கின்றனர். பிறகு முதியபெண் எல்லோருக்கும் உணவு பரிமாறுகின்றார். உண்டு முடித்தபின் எல்லோரும் தியாகராஜருடன் மீண்டும் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருக்கின்றனர். பொழுது விடியும் வேளையில் அவரிடம் விடைபெற்றுக்கொண்டு வருங்காலத்தில் புகழ்பெறப் போவதாக வாழ்த்திவிட்டு, வெளியில் வருகின்றனர். ஆனால் அடுத்த நிமிடமே அவர்கள் மாயமாய் மறைந்து விடுகின்றனர். தியாகராஜருக்கு ஒன்றுமே புரியவில்லை. அவர் அங்கும் இங்குமாக ஓடி அவர்களைத் தேடிப்

பார்க்கின்றார். அப்பொழுது வந்திருந்த அம்மூவரும் ஸ்ரீராமன், சீதை, ஆஞ்சநேயராகத் தியாகராஜருக்குக் காட்சியளிக்கின்றனர். அப்பொழுது தியாகராஜர் 'பவனுத' என்னும் மோகனராகக் கிருதியை இயற்றிப் பாடத்துவங்குகின்றனர். அதன் பிறகு தியாகராஜரின் புகழ் உலகம் எங்கும் பரவத் தொடங்குகின்றது.

*திருப்பதிக்குத் தல யாத்திரை*

தியாகராஜர் தம்முடைய எழுபத்திரண்டாம் வயதில் தல யாத்திரைக்குப் புறப்படுகின்றார். அப்பொழுது திருப்பதி வரை சென்று ஸ்ரீ வெங்கடேசப் பெருமானை வழிபாடு செய்ய நினைக்கின்றார். தியாகராஜரிடம் அப்பொழுது இருபதுக்கும் மேற்பட்ட சிஷ்யர்கள் இருந்தனர். தஞ்சாவூர் இராமாராவ் என்பவரே அவர்களில் மூத்தவராக இருக்கின்றார். அவர் தான் மற்றவர்களுக்கு வழிகாட்டியாகவும் இருக்கின்றார். வீணை குப்பையர் முன்னதாகவே சென்று, எங்கெங்குத் தங்குவது என்ற ஏற்பாடுகளைச் செய்து வைக்கின்றார். அப்பொழுதெல்லாம் இன்று உள்ளது போல் சாலைப் போக்குவரத்து வசதிகள் அவ்வளவாக இல்லாத காலம். எனவே மற்ற சிஷ்யர்கள் தியாகராஜரைப் பல்லக்கில் வைத்துத் தூக்கிக் கொண்டு பயணம் செல்கின்றனர். ஒரு நாள் காலை 10 மணிக்கு "மேல் திருப்பதி" யைச் சென்றடைகின்றனர். பின்பு எல்லோரும் தீர்த்தக் குளத்திற்குச் சென்று, நீராடத் தொடங்குகின்றனர். சிஷ்யர்கள் பயணக் களைப்பினால் சிறிது நேரம் கூடுதலாக நீராடிக் கொண்டிருந்தனர்.

தியாகராஜர் வெங்கடேசப் பெருமானைத் தரிசிக்கச் செல்லும் பொழுது சரியாகக் காலை 11.30 மணியாகி விட்டது. அப்பொழுது தரிசன நேரம் முடிந்ததால் திரையிடப்பட்டிருந்தது. கோயில் அதிகாரிகளும், அர்ச்சகர்களும் இவரைப் பற்றிச் சரியாக அறியாததால், அசட்டையாக இருந்து விட்டனர். தியாகராஜரிடமிருந்து ஏழுமலையானைத் தரிசிக்க முடியவில்லையே என்ற ஏக்கம் வெளிப்பட்டது.

உடனே அவர் 'தெரதீயக ராதா' என்ற கௌளிபந்து ராகக் கீர்த்தனையை இயற்றிப் பாடத்துவங்கினார். சிஷ்யர்களும் ஒவ்வொருவராக வந்து சேரத் தொடங்கினர். அவரது இனிய குரலையும், அதன் இசை இன்பத்தையும் கேட்டு ஏராளமான பக்தர்கள் கூடிவிட்டனர். பாடல்

முடிந்ததும் திரை அறுந்து கீழே விழுந்தது. அப்பொழுது ஸ்ரீ வெங்கடேசப் பெருமானின் திருக்காட்சி ஜோதிமயமான சொரூபமாகக் காட்சியளித்தது. அதன் பிறகு தியாகராஜரின் புகழ் உலகம் எங்கும் பரவத் தொடங்கியது.

*தியாகராஜரின் சென்னைத் தல யாத்திரை*

திருப்பதிப் பயணத்தை முடித்துக் கொண்டு திருவையாற்றுக்குத் திரும்பும் பொழுது தியாகராஜர் சென்னை, கோவூர் வழியாகப் பயணத்தை மேற்கொள்கின்றார். கோவூரில் சில நாட்கள் தங்கியிருந்து, தரிசனத்தை முடித்துக் கொண்டு, பின்பு திருவையாற்றிற்குப் புறப்படுகின்றார். அப்பொழுது கோவூரில் வாழ்ந்த பெருஞ்செல்வரும், சங்கீத இரசிகருமான கோவூர் சுந்தர முதலியார் தியாகராஜருக்கு ஏதாவது உதவி செய்ய வேண்டும் என்று நினைக்கின்றார். அவர் ஆயிரம் பொற்காசுகளைக் கொண்ட ஒரு பொன் முடிப்பைத் தியாகராஜருக்குத் தெரியாமல் அவரது பல்லக்கில் வைத்து விடுகின்றார். சிஷ்யர்கள் அந்தச் செல்வரை தடுக்கவும் முடியாமல் அதனைப் பற்றித் தியாகராஜரிடம் தெரிவிக்கவும் முடியாமல் தடுமாறுகின்றனர். தியாகராஜரிடம் கூறினால் பொன் முடிப்பை ஏற்றுக்கொள்ளமாட்டார் என்பதை அறிந்த அந்தப் பெருஞ்செல்வர் 'இதனை இறைவனுக்காக வைத்துள்ளேன்; வரும் ஸ்ரீராமநவமி, ஸ்ரீகிருஷ்ண ஜெயந்தி, வைகுண்ட ஏகாதசி வைபவங்களின் பூஜை செலவுக்காக வைத்துள்ளேன். இதனை யாரும் மறுக்கக் கூடாது' என்று சிஷ்யர்களிடம் வேண்டுகோள் விடுக்கின்றார்.

பின்பு பயணம் தொடங்கியது. இரவில் ஒரு காட்டு வழிப்பாதையில் தியாகராஜரைப் பல்லக்கில் சுமந்து கொண்டு சிஷ்யர்கள் சென்று கொண்டு இருக்கின்றனர். அந்த இடம் கொடிய 'நாகலாபுரம்' வழிப்பறித் திருடர்களுக்குப் பெயர்போன இடம். அவர்கள் கூழாங்கற்களைச் சரமாரியாக எறிந்து வழிப்பயணிகளைக் காயப்படுத்தி, கொள்ளையடிக்கும் கலையில் கைதேர்ந்தவர்கள். அத்தகைய திருடர்கள் ஒரு மறைவிலிருந்து வெளிப்பட்டு தியாகராஜரையும், சிஷ்யர்களையும் சூழ்ந்து கொண்டனர்.

சிஷ்யர்கள் மெல்லத் தியாகராஜரின் அருகில் சென்று, நாகலாபுரம் திருடர்கள் வந்து சூழ்ந்து விட்ட செய்தியைக் கூறுகின்றனர். அதற்குத் தியாகராஜர் சினந்து 'நம்மிடம் என்ன இருக்கிறது? அவர்கள் வந்து எடுத்துச் செல்வதற்கு?' என்று கேட்கின்றார்.

வீணை குப்பையர் தயங்கியவாறே, 'நமது பல்லக்கில் 1000 பொற்காசுகள் கொண்ட பொன் முடிப்பைக் கோவூர் சுந்தர முதலியார் வைத்துள்ளார்' என்று கூறுகின்றார்.

தியாகராஜருக்குக் கோபம் மிகுதியாக வருகின்றது. 'அந்தப்பொன் முடிப்பிலுள்ள பொற்காசுகளைத் தூக்கி, இந்தத் திருடர்களின் முன்னால் எறியுங்கள்' என்று கத்துகின்றார்.

அப்பொழுது தஞ்சாவூர் ராமாராவ் என்ற பிரதான சிஷ்யர் முன்னால் வந்து 'இல்லை ஐயா; இந்தப்பணம் ஸ்ரீராமனின் ராமநவமி, கிருஷ்ண ஜெயந்தி, வைகுண்ட ஏகாதசி ஆகிய பூஜை செலவுக்காக வைக்கப்பட்டுள்ளது. இது இறைவனின் பணம்; இதை எடுத்துத் திருடர்களுக்குக் கொடுக்க நமக்கு உரிமையில்லை' என்று கெஞ்சுகின்றார்.

அதற்கு தியாகராஜர் 'இது இறைவனின் பணமாக இருந்தால், இதனைக் காப்பாற்றும் பொறுப்பையும் இறைவனே ஏற்றுக் கொள்ளட்டுமே? நாம் ஏன் இந்தப் பணத்திற்காகக் கவலைப்பட வேண்டும்' என்று கேட்கின்றார். அவ்வளவுதான் அடுத்த சில விநாடிகளில் அங்கே இரண்டு இளைஞர்கள் தோன்றி அந்தத் திருடர்களின் மீது அம்புமாரி பொழியத் தொடங்கி விட்டனர். இதனால் திருடர்கள் அனைவரும் ஓட்டம் எடுக்கத் தொடங்கினர். பின்பு அந்த இரண்டு இளைஞர்களும் பல்லக்கின் அருகில் வந்து 'திருடர்கள் ஓடிவிட்டனர், இனி நீங்கள் நிம்மதியாகப் பயணத்தைத் தொடங்கலாம்' என்று கூறினர்.

அந்தக் காட்டு வழிப்பாதை முடியும் வரையிலும் அந்த இளைஞர்கள் பல்லக்கின் பின்னால் பாதுகாவலாக வந்து கொண்டே இருந்தனர். அவர்களுக்கும் பின்னால் நாகலாபுரம் திருடர்களும் வந்து கொண்டே இருந்தனர். பொழுது விடியும் வேளையில் எல்லோரும் ஒரு கிராமத்தை அடைந்து, அங்கிருந்த சத்திரத்தில் போய்த் தங்கினர். அப்பொழுது நாகலாபுரம் திருடர்கள் தியாகராஜரின் அருகில் வந்து தங்களின் செயலுக்காக மன்னிப்புக் கேட்டதுடன், இரவு நேரத்தில் திடீரென வந்து இப்படி அம்புமாரி பொழிந்த இந்த இளைஞர்கள் யார் என்பதைக் கூறவேண்டும் என்று கெஞ்சினர். தியாகராஜருக்கும் இவர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆர்வம் மிகுந்தது. தியாகராஜர் அந்த இளைஞர்களை அழைத்து விசாரிக்க அப்பொழுது அவர்கள் ஸ்ரீராமன்,

லட்சுமணனாகக் காட்சி தந்து மறைந்தனர். அப்பொழுது தியாகராஜர் 'எந்த பாக்யமு' என்ற சாரங்காராகக் கீர்த்தனையைப் பாடித்தமது மகிழ்ச்சியைத் தெரிவித்தார்.

தியாகராஜர் தமது இராம பக்தியால் இறைவனையே சேவகர்களாக அழைத்ததுடன், உடனிருந்த சிஷ்யர்களுக்கும், வழிப்பறித் திருடர்களுக்கும் கூட 'ஸ்ரீராம லட்சுமணர்களின் தரிசனக்காட்சியைக் காணும் பாக்கியத்தை' ஏற்படுத்திக் கொடுக்கின்றார் என்பதை நினைக்கும் பொழுது நமக்கெல்லாம் மகிழ்ச்சியை அளிக்கின்றது.

*தியாகராஜரின் கடைசி நாட்கள்*

தியாகராஜர் இறப்பதற்குப் பத்து நாட்களுக்கு முன்பு ஒரு கனவு காணுகின்றார். அதில் ஸ்ரீராமர் தமது பரிவாரங்களுடன் தோன்றிக் காட்சியளிக்கின்றார். அதில் 'பத்து தினங்களில் உன்னை எனது பாதார விந்தங்களில் அழைத்துக் கொள்ளப் போகின்றேன்' என்று கூறி மறைந்தார். மறுநாள் ஏகாதசி பஜனையின் பொழுது தியாகராஜர் தமது சிஷ்யர்களிடம் 'இன்னும் பத்து நாட்களில் இங்கு ஓர் அற்புதம் நடக்கப் போகின்றது. அதை நீங்கள் எல்லாரும் பார்க்கப் போகின்றீர்கள்' என்று தமது இறுதி நாளை ப் பற்றி சூட்சுமமாகக் கூறுகின்றார். அவர் கூறியவாறே பத்து நாட்கள் கழித்து, பகுள பஞ்சமி தினத்தில் தியாகராஜர் இராமபிரானின் பாதார விந்தங்களில் சென்று கலந்து விடுகின்றார்.

எனவே தியாகராஜர் 'இராம பக்தராகவே வாழ்ந்து, இராமனையே சதாகாலமும் பாடி, ஸ்ரீ ராமனின் திருப்பாதங்களில் இரண்டறக் கலந்துவிட்டார்' என்பது தெளிவாகின்றது. 'ஓ ராமா! ஸ்ரீராமா! என்னைச் சேர்ந்தவர்கள் எல்லாம் பக்திமார்க்கத்தைப் பற்றி அறியாதவர்களாக இருக்கும்போது, நீர் எனக்கு மட்டும் கிடைத்தது எப்படியோ?' என்றும், இப்படிப்பட்ட சகோதரர்கள் என்னுடன் பிறந்து என்னைப்பக்தி செய்யவிடாமல் கஷ்டப்படுத்துகின்றார்களே?' என்றும் அவர் தமது பாடல்களில் ஆங்காங்கே வருந்திக் கூறுவது, அவரது ஸ்ரீராமபக்தியை நமக்கு நன்றாக வெளிப்படுத்துகின்றது எனலாம்.

# 4. தியாகராஜர் மனிதனைப் பாடாமை

ஸ்ரீ தியாகராஜரின் உலகளாவிய இசைப் புகழுக்குக் காரணம் அவரது 'மனிதனைப் பாடமையே' என்னும் கொள்கையே என்பதை நாம் எந்த ஒரு சூழ்நிலையிலும் மறக்க முடியாது. மகாராஜாக்களையும், செல்வர்களையும் இசைக்கலைஞர்கள் புகழ்ந்து பாடுவது இன்றோ நேற்றோ வளர்ந்த ஒன்று இல்லை. இது மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய தொல்காப்பியர் காலத்திலேயே "தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்கு, சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்" என்று கூறப்பட்டுள்ளது. எனவே அரசன் இரவில் தூங்கச் செல்லும் பொழுதும் மீண்டும் வைகறையில் அவன் விழித்தெழும்பொழுதும் அம்மன்னனைப் பற்றிப் புகழ்ந்து பாடுவது இசைக் கலைஞர்களின் வழக்கமாகும்.

இத்தகைய இசைக்கலைஞர்கள் நாடுவிட்டு நாடு சென்றும் மன்னர்களைப் புகழ்ந்து பாடுவர். அவர்களிடம் பரிசுகளைப் பெற்று அதனைத்தம் உறவினர்களுக்குப் பகிர்ந்தளித்து மகிழ்ச்சியாக வாழ்ந்துள்ளனர். இந்நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டு தான் தமிழ்நாட்டில் பல 'ஆற்றுப்படை இலக்கியங்களே' தோன்றியுள்ளன.

*மனிதனைப்பாடும் மரபு*

ஏன் நமது தியாகராஜரின் காலத்தையே எடுத்துக் கொள்வோமே? சங்கீத மும்மூர்த்திகள் என்று போற்றப்படும் சியாமாசாஸ்திரி, தியாகராஜர், முத்துசாமி தீட்சிதர் என்ற மூவரும் ஒரே காலத்தில் வாழ்ந்தவர்கள். இதில் மூத்தவரான சியாமா சாஸ்திரி, தஞ்சை சரபோஜி மகாராஜாவின் சமஸ்தானத்தில் சென்று பாடியவர். பொப்பிலி சமஸ்தானத்திலிருந்து வந்த கனம் கேசவய்யாவுக்கும், இந்த சியாமா சாஸ்திரிக்கும் தஞ்சை சமஸ்தானத்தில் நடந்த இசைப்போட்டியில் சியாமாசாஸ்திரி வெற்றி பெற்று சரபோஜி மகாராஜாவால் பாராட்டும், பரிசுகளும் தரப்பெற்றுள்ளார்.

இளையவரான முத்துசாமி தீட்சிதர், சென்னை மணலியிலுள்ள சின்னைய்ய முதலியாரின் சமஸ்தானத்தில் பாடி 'கனகாபிஷேகம்' செய்யப் பெற்றவர். எட்டயபுரம் யுவராஜபூபதியின் சமஸ்தானத்தில் பாடி, அங்கேயே தமது இறுதிக் காலத்தைக் கழித்தவர். தம்பி பாலு ஸ்வாமி தீட்சிதருக்கு மகாராஜா திருமணம் செய்து வைக்கின்றார் என்பதற்காக அம்மன்னரைப்

புகழ்ந்து 'வேங்கடேஸ்வர யாதவ பூபதி மாஸ்ரயே' என்ற மேகரஞ்சீராகக் கீர்த்தனையை இயற்றிப்பாடியவர்.

ஏன் தியாகராஜரின் முன்னோர்களையேகூட எடுத்துக் கொள்வோமே? இவரது தாத்தா கிரிராஜக்கவி தஞ்சை சரபோஜி மகாராஜாவின் மகனான செர்போஜிக்கும் சந்திரராஜனின் மகளான லீலாவதிக்கும் நடந்த திருமணக் கதையை மையமாக வைத்துக்கொண்டே 'லீலாவதி கல்யாணம்' என்ற யட்சகான நாடகத்தை இயற்றியவர்.

இவரது தந்தையான இராமப்பிரம்மம் துளஜாஜி மகாராஜாவின் சமஸ்தானத்தில் புலவராக இருந்தவர். மகாராஜாவால் வீடும், நிலமும் மானியமாக அளிக்கப் பெற்றவர். அரண்மனையில் நடைபெறும் இராமநவமி விழாக்களில் தொடர்ந்து 24 வருடங்களாக இராமாயண உபன்னியாசம் செய்வதற்காக அழைக்கப்பெற்றவர். அவரோடு சமஸ்தானப் பிரசங்கத்திற்குச் செல்லும் நமது தியாகராஜர் தான் இராமாயணச் சுலோகங்களைப் படிக்கத் தந்தை அதற்குப் பொருள் கூறுவதே வழக்கமாக இருந்துள்ளது.

எனவே மகாராஜாக்களையும், செல்வர்களையும் புகழ்ந்துபாடி, பரிசுகளைப் பெறுவதே நமது இசைக்கலைஞர்களின் வழக்கமாகும். இவ்வாறே தியாகராஜரின் காலத்தில் வாழ்ந்தவர்களும், தியாகராஜரின் மூதாதையர்களும் மன்னர்களைப் புகழ்ந்து பாடி, பரிசுகளைப் பெற்று வாழ்ந்து வந்துள்ளனர். ஆனால் இத்தகைய சூழ்நிலையில் பிறந்த தியாகராஜர் மட்டும் மன்னனைப் புகழ்ந்து பாடமாட்டேன் என்று கூறி மறுக்கின்றார். இதனால் தான் தியாகராஜருக்கு உலகளாவிய இசைப்புகழ் கிடைக்கின்றது என்பதை நாம் அறிய முடிகின்றது.

### *தஞ்சாவூர் சமஸ்தானத்தில் பாடுவதற்கான அழைப்பு*

தஞ்சாவூர் சமஸ்தானத்தின் தலைமைப் புலவராக வீற்றிருந்தவர் சொண்டி வெங்கட சுப்பையர் அவரது வீட்டில் எப்பொழுதும் சங்கீத நிகழ்ச்சிகளும், சங்கீத விமர்சனங்களும் நடந்து கொண்டே இருக்கின்றன. ஒரு நாள் அவரது வீட்டில் பாடிய தியாகராஜர், அரண்மனை வித்துவான்களையெல்லாம் மெய்மறந்து போகும்படி செய்துவிட்டார். இந்தச் செய்தி எல்லா மக்களுக்கும் பரவத் தொடங்குகின்றது. சொண்டி

வெங்கடசுப்பையர் மூலமாக இதனை அறிந்த சரபோஜி மகாராஜா தியாகராஜரைத் தமது சமஸ்தானத்தில் அழைத்துப் பாட வைக்க விரும்புகின்றார். எப்படியும் மன்னரைப் புகழ்ந்து அரசவையில் பாட வைத்து விட வேண்டும் என்ற பேராசையில் அமைச்சர்களும் தியாகராஜரிடம் வந்து அழைக்கின்றனர். 'ஏ... தியாகராஜா! நீ ஏதாவது ஒன்று, இரண்டு பாடல்களாவது நமது சரபோஜி மகாராஜாவைப் புகழும் படியாக வந்து பாடினால் போதும். மகாராஜா உனக்குப் பத்துவேலி நிலமும், ஒரு பொன் முடிப்பும் பரிசாகக் கொடுப்பதற்காக இருக்கின்றார்' என்று கூறுகின்றனர். ஆனால் தியாகராஜர் 'நிதிக்காக மனிதனைப் புகழ்ந்து பாடமாட்டேன்' என்று மறுக்கின்றார்; மனிதனைப் புகழ்ந்து பாடுவதை விட மகேசனின் புகழ்பாடுதலே சிறந்தது என்ற தமது கொள்கையைக் கூறுகின்றார்.

அவர்கள் மீண்டும் வற்புறுத்தவே தியாகராஜர் 'நிதி சால சுகமா, சந்நிதி சால சுகமா' என்ற கல்யாணிராகக் கிருதியைப் பாடத் துவங்குகின்றார். இந்த உலகில் நிலையானது இறைவனின் புகழ் மட்டுமே! நிலையற்ற வாழ்க்கையையுடைய மனிதனைப்பாடி எனது ஆயுளை வீணாக்கமாட்டேன் என்று கூறி அவர்களை அனுப்பி வைக்கின்றார்.

### *சரபோஜி மகாராஜாவின் கோபம்*

கோபமுற்ற சரபோஜி மகாராஜா இரண்டு குதிரைப்படை வீரர்களை அனுப்பி, உடனே தியாகராஜரைக் கொண்டு வரும்படி கட்டளை இடுகின்றார். அவர்கள் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் சரபோஜி தீராத வயிற்று வலியினால் துன்பப்படுகின்றார். அரண்மனை வைத்தியர்களால் சிகிச்சை அளிக்க முடியவில்லை. அரண்மனை ஜோதிடர்களும் செய்வதறியாது கையைப் பிசைந்து கொண்டு நிற்கின்றனர். அவர்களில் ஒருவர் சரபோஜி மகாராஜா தியாகராஜரை அவமானப்படுத்தி இம்சிக்க நினைப்பதால் இந்த வயிற்றுவலி வந்திருக்கலாம் என்ற கருத்தைத் தெரிவிக்கின்றார். உடனே சரபோஜி அடுத்த இரண்டு குதிரைப்படை வீரர்களை அனுப்பி, முன்னால் சென்ற வீரர்களை வழியிலேயே திருப்பி அழைத்து வருமாறு கட்டளை இடுகின்றார். அவர்கள் விரைந்து சென்று முன்னால் சென்ற இரண்டு வீரர்களையும் அழைத்து வருவதற்குள்ளாகவே சரபோஜி மகாராஜாவுக்கு வயிற்றுவலி முழுமையாக நீங்கி விட்டது.

மகாராஜா இறைவனின் பெருமையை நினைத்தார். தியாகராஜரின் புனிதத் தன்மையையும் சக்தியையும் எண்ணி வியந்தார்.

*சரபோஜி மகாராஜாவின் மனமாற்றம்*

உடனே சரபோஜி மகாராஜா தியாகராஜரின் வீட்டுக்குச் சென்று, நடந்ததை அப்படியே கூறி, தமது தவறான செயலுக்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். அன்று முதல் அவர்கள் சிறந்த நண்பர்களாகப் பழகினர். தியாகராஜரின் வீட்டில் நடைபெறும் ஒவ்வொரு ஏகாதசி பஜனைகளிலும் சரபோஜி மகாராஜா தவறாமல் வந்து கலந்து கொள்வார். அவருடன் அவரது மருமகன் மோதிராவும், மற்றுமுள்ள அரண்மனைப் பெண்களும் கூட வருவதுண்டு. தியாகராஜரின் வீட்டின் பின்புறமுள்ள கல்யாணமகாலில் அவர்கள் இரவு முழுவதும் தங்கியிருந்து, தியாகராஜரின் இசையமுதைப் பருகி விட்டு, அதிகாலையில் அவர்கள் குதிரையிலும், பல்லாக்கிலும் தஞ்சாவூர் அரண்மனைக்குச் செல்வது வழக்கமாகிவிட்டது.

'மனிதனைப் பாடமாட்டேன்' என்று தியாகராஜர் கூறியதால்தான் அவரது புகழ் உலகம் முழுவதும் பரவத் தொடங்குகின்றது. அரசனையே ஆசிரமம் நோக்கி வரச் செய்கின்றது. 'மகாபுருஷர்' என்று மக்களால் போற்ற வைக்கின்றது.

*மகாராஜா அளித்த வெகுமதி*

தியாகராஜர் வறுமையோடு வாழ்ந்து கொண்டிருக்கும் போதெல்லாம் சரபோஜி அவருக்கு எப்படியாவது உதவி செய்யவேண்டுமே என்று துடிக்கின்றார். ஆனால் தியாகராஜர் கடைசி வரை அவற்றையெல்லாம் மறுத்துக் கொண்டே வருகின்றார். சரபோஜி ஒருமுறை தமது ஆட்களை அனுப்பித் தியாகராஜர் உஞ்ச விருத்தி எடுத்துக்கொண்டு செல்லும்பொழுது அவருக்குத் தெரியாமல் அந்த செம்பில் தங்கக் காசுகளைப் போடும்படிச் செய்கின்றார். ஆனால் அதையும் ஏற்க மறுத்து, அச்செம்பிலுள்ள பொற்காசுகளைத் தெருவிலேயே கொட்டிவிட்டுச் சென்று விடுகின்றார் தியாகராஜர். இறுதியில் சரபோஜி மகாராஜா வற்புறுத்தி 'ஏதாவது ஒரு கைங்கர்யத்தை தாங்கள் என்னிடமிருந்து பெற்றத்தான் ஆகவேண்டும்' என்ற கேட்டபொழுது, கல்யாண மகாலில் தமது சிஷ்யர்களைத் தங்க வைத்து, அவர்களுக்கு அமுது படைக்கும் வாய்ப்பினைச் சரபோஜி மகாராஜாவுக்கு வழங்குகின்றார் தியாகராஜர்.

*திருவாங்கூர் சுவாதித்திருநாள் மன்னரின் அழைப்பு*

அடுத்தமுறை தியாகராஜருக்கு மன்னரைப் புகழ்ந்து பாடவேண்டும் என்ற அழைப்பு கேரளாவிலுள்ள திருவாங்கூர் சமஸ்தானத்தில் இருந்து வருகின்றது. திருவாங்கூர் சமஸ்தானத்தில் அப்பொழுது 'சங்கீத மகாராஜாவாகிய' சுவாதித்திருநாள் ஆட்சி செய்து வருகின்றார். சமஸ்தானத்தின் தலைமைக் கலைஞராக பரமேஸ்வர பாகவதர் வீற்றிருந்தார். தியாகராஜரின் சிஷ்யராகிய கன்னைய பாகவதரின் மூலம் இவருடைய கிருதிகள் எல்லாம் அப்பொழுது சுவாதி திருநாளின் சமஸ்தானத்தில் புகழ் பெற்று விளங்கின. எனவே சுவாதித்திருநாள் மகாராஜா, தியாகராஜாவைத் தமது சமஸ்தானத்திற்கு அழைத்துப் பாட வைக்கவேண்டும் என்று விரும்புகின்றார். இதற்காகத் தஞ்சை நால்வருள் ஒருவராகிய வடிவேல் நட்டுவனாரைத் திருவையாற்றுக்கு அனுப்பி வைக்கின்றார்.

வடிவேல் நட்டுவனார் வாய்ப்பாட்டு பாடுவதிலும், பிடில்வாசிப்பதிலும், பரதநாட்டியக்கலையிலும் வல்லவராகத் திகழ்ந்தவர். இவர் தியாகராஜரின் வீட்டிற்குச் சென்று மெல்ல வீணைக்குப்பையரிடம் தமது வருகையைப் பற்றித் தெரிவிக்கின்றார். ஆனால் குரு தியாகராஜரிடம் இவரை அழைத்துச்சென்று அறிமுகம் செய்து வைக்கவே எல்லோரும் அஞ்சுகின்றனர். வேறு வழியின்றி இவர் தியாகராஜர் வீட்டின் எதிர்வரிசையிலிருந்த ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்து, அதில் தங்கியிருக்கின்றார்.

*வடிவேல் நட்டுவனார் செய்த தந்திரம்*

பின்பு தியாகராஜரைச் சந்திப்பதற்காக வடிவேல் நட்டுவனார் ஒரு தந்திரத்தைக் கையாளுகின்றார். அதாவது தியாகராஜர் குளிப்பதற்கும், சந்தியா வந்தனத்திற்கும் காவேரி ஆற்றுக்கு அந்த வழியாகச் செல்லும்பொழுதெல்லாம் பாடத்துவங்குகின்றார். முதல்நாள் தியாகராஜர் நின்று சிறிதுநேரம் கேட்டுவிட்டுச் செல்லுகின்றார். இரண்டாவது நாள் நீண்ட நேரம் நின்று பாட்டைக் கேட்டுவிட்டுச் செல்லுகின்றார். மூன்றாவது நாள் பாடுபவர் யார் என்ற தெரிந்து கொள்ளவேண்டுமென்ற ஆர்வத்தின் காரணமாகத் தியாகராஜர் வீட்டுக்குள்ளேயே சென்று விடுகின்றார்.

அப்பொழுது வடிவேல் நட்டுவனார் அவரிடம் வணங்கித் தம்மைப்பற்றி அவரிடம் அறிமுகம் செய்து கொள்கின்றார்.

தியாகராஜரின் வீட்டில் வந்து இறைவழிப்பாட்டில் பாடுவதற்கு அவரிடம் இசைவைப் பெற்றுக் கொள்கின்றார். மறுநாள் தியாகராஜரின் வீட்டிற்குச் சென்று மாலை வேளையில் அவரது மனம் குளிரும் படியாகப் பாடுகின்றார். அவர் மகிழ்ந்து 'உனக்கு என்ன வேண்டும்?' என்று கேட்கும் படியான ஒரு சூழ்நிலையை உருவாக்கி அப்பொழுது தாம் வந்துள்ள காரணத்தைத் தெரிவிக்கின்றார். தியாகராஜரைத் திருவாங்கூர் சமஸ்தானத்திற்கு வருகை புரிந்து, சுவாதித்திருநாளின் சமஸ்தானத்தில் பாடும்படியாக அழைக்கின்றனர். அதற்குத் தியாகராஜர் வெகுண்டெழுந்து 'நான் மன்னர்களின் முன்பும், சமஸ்தானத்திலும் மனிதனைப் புகழ்ந்து பாடுவதை வெறுப்பவன்' என்று கூறி அவரைத் திருவாங்கூருக்கு அனுப்பி வைக்கின்றார். இந்நிகழ்ச்சிகளால் தியாகராஜரின் மதிப்பு உலகில் பன்மடங்காக உயர்கின்றது.

*சட்காலம் கோவிந்தமாரரைச் சிறப்பித்தல்*

தியாகராஜர் 'மனிதனைப் புகழ்ந்து பாடமாட்டேன்' என்றாரே தவிர, மனிதனின் தகுதிகளையும், பெருமைகளையும் அவர் ஒரு நாளும் மதிக்கத் தயங்கியதில்லை. திருவாங்கூரில் உள்ள இராமமங்கலம் கிராமத்தைச் சேர்ந்த சட்காலம் கோவிந்தமாரர் என்ற இசைக்கலைஞர் ஆறு காலங்களிலும் பல்லவி பாடுவதில் வல்லுநர். அவருடைய தம்பூரா மிகவும் பெரியது. அதில் இரண்டு பஞ்சமம், இரண்டு சாரணி, இரண்டு அனுசாரணி, ஒரு மந்திரம் என்று ஏழு தந்திகளைக் காட்டி மீட்டுவார். ஒரு கையில் தம்புராவையும், மறுகையில் பக்கவாத்தியமாகிய கஞ்சிராவையும் இசைத்துக் கொண்டே பாடுவதில் வல்லவர். அவர் திருவையாறு வந்திருந்தபொழுது, தியாகராஜரின் வீட்டில் நடந்த இரவுக் கச்சேரியில் பாடத் துவங்கினார். அப்பொழுது ஜெயதேவரின் நான்காவது அஷ்டபதியாகிய 'சந்தன சர்ச்சித' என்ற பந்துவராளி ராகக் கிருதியைப் பாடினார். முதலில் அதி அதி விளம்பித காலத்திலும், பின்பு அதி விளம்பித காலத்திலும், பின்பு விளம்பித காலத்திலும், அதன் பின்பு மத்திம காலத்திலும், பின்பு துரித காலத்திலும், பின்பு அதிதுரித காலத்திலும் என்று ஆறுகாலங்களிலும் அப்பாடலைப்பாடி,

அனைவரையும் வியப்பில் ஆழ்த்தினார். தியாகராஜர், அவரது தாளக் கட்டுப்பாட்டினையும், இலய நிர்ணயத்தையும் கண்டு வியந்து 'எந்தரோ மாகானுபாவுலு, அந்தரிகி வந்தனமு' என்ற பஞ்சரத்தினக் கிருதியைத் தமது சிஷ்யர்களுடன் சேர்ந்து பாடி, அவருக்குத் தமது மரியாதையைத் தெரிவித்துக் கொண்டார்.

*தியாகராஜர் மற்ற கலைஞர்களுக்குச் செய்த மரியாதை*

உண்மையான சங்கீதம் எங்கே இருந்தாலும் அவர்களை தட்டிக்கொடுத்து ஊக்கப்படுத்துவது தியாகராஜரின் வழக்கமாகும். மகா வைத்தியநாதய்யரின் தந்தையாகிய துரைசாமி ஐயர் ஒருநாள் பஜனை இசைக்குழுவில் பாடிக்கொண்டே வந்தார். தியாகராஜரின் வீட்டுக்கருகே வந்ததும் தியாகராஜரின் கிருதி ஒன்றினை மிகவும் இனிமையாகப் பாடினார். தியாகராஜர் அவரது இசையால் ஈர்க்கப்பட்டு, வீட்டை விட்டு வெளியில் வந்தார். அந்த பஜனை இசைக்குழுவோடு சிறிது தூரம் நடந்து சென்று, துரைசாமி ஐயரின் இசையைக் கேட்டு மகிழ்ந்தார். பின்பு, 'தாங்கள் வருங்காலத்தில் சிறந்த இசைக் கலைஞராக வருவீர்கள்' என்று வாழ்த்தி விட்டுத் தம் வீட்டிற்குத் திரும்பி வந்தார்.

சியாமா சாஸ்திரியின் சிஷ்யரான நாதசுரம் தாசரி என்பவர் ஒரு நாள் இரவு சுவாமியின் திருவிதியுலாவில் நாதசுரம் வாசித்துக்கொண்டே வந்தார். அவர் தியாகராஜரின் வீட்டிற்கருகே வந்ததும் சுத்தசாவேரி இராகத்தில் நீண்ட நேரம் ஆலாபனை செய்து கொண்டிருந்தார். பிறகு தியாகராஜரின் 'தாரிணி தெலுசு கொண்டி' என்ற கிருதியை மிகவும் இனிமையாகச் சங்கதிகள் போட்டு வாசித்துக் கொண்டிருந்தார். தியாகராஜர் அந்த இசையால் ஈர்க்கப்பட்டு, வீட்டை விட்டு வெளியில் வந்தார். அந்த நாதசுரக்கலைஞரின் அருகில் சென்று, 'உனது நாதசுரக் கச் சேரி மிகவும் சிறப்பாக இருக்கின்றது. வருங்காலத்தில் நீ சிறந்த கலைஞனாக வருவாய்' என்று வாழ்த்திவிட்டுத் தன் வீட்டிற்குத் திரும்புகின்றார்.

ஒரு நாள், திருவையாற்றுக்கு வந்திருந்த பொம்மலாட்ட இசைக்குழுவில் திருபுவனம் சுவாமிநாத ஐயர் என்பவர் ஆனந்தபைரவி இராகத்தை மிகவும் சிறப்பாகப் பாடினார். இந்த நிகழ்ச்சியைப் பார்த்த தியாகராஜரின் சிஷ்யர்கள் தியாகராஜரிடம் பொம்மலாட்டக் குழுவில் உள்ள

பாடகரின் திறமையைப் பற்றி விமரிசனம் செய்தனர். ஒரு நாள் இரவு தியாகராஜரே புறப்பட்டுப் பொம்மலாட்ட இசை நிகழ்ச்சியைக் காண நேரிலேயே வந்துவிட்டார். நிகழ்ச்சியின் நடுவில் ஆனந்தபைரவி இராகத்தில் நீண்ட ஆலாபனை நடந்தது. தியாகராஜர் மெய்மறந்து அந்த இராக ஆலாபனையைக் கேட்டு மகிழ்ந்தார். தியாகராஜரைக் கண்டுவிட்ட இரசிகர்கள் அங்கே பெருங்கூட்டமாகக் கூடிவிட்டனர். அவர்களின் மத்தியில் தியாகராஜர், திருபுவனம் சுவாமிநாத ஐயரின் ஆனந்தபைரவி ராகத்தை மிகவும் புகழ்ந்து பேசி, வாழ்த்தி விட்டுப் பின்பு வீட்டிற்குத் திரும்பினார்.

தமது வீட்டிற்கு விருந்தினர்களாக வரும் சங்கீத வித்துவான்களையும் தியாகராஜர் சிறப்பாக வரவேற்றார். காசியிலிருந்து வந்திருந்த இந்துஸ்தானி சங்கீத வித்துவானாகிய கோபிநாத பட்டாச்சாரியார் இவரது வீட்டில் பல நாட்கள் தங்கியிருந்தார். ஆந்திராவைச் சேர்ந்த திருநரசிம்மதாசர் என்ற வாக்கேயக்காரர் இவரது வீட்டில் பல நாட்களாகத் தங்கியிருந்தார்.

தமது காலத்தில் வாழ்ந்திருந்த சங்கீத வித்துவான்களோடும் தியாகராஜர் நல்ல தொடர்பு கொண்டிருந்தார். சியாமாசாஸ்திரியும் இவரும் சிறந்த நண்பர்களாகப் பழகி வந்தனர். இருவரும் தாங்கள் இயற்றிய கிருதிகளைத் தங்களுக்குள் பாடி விமரிசனம் செய்து கொள்வது வழக்கமாக இருந்தது. முத்துசாமி தீட்சிதருக்கும் இவருக்கும் நேரடித்தொடர்பு இல்லை. என்றாலும் தீட்சிதரின் தம்பிகளாகிய பாலுஸ்வாமி தீட்சிதரும், சின்னஸ்வாமி தீட்சிதரும் சிறிது காலம் தியாகராஜரிடம் இசை படித்துள்ளனர். அவர்களின் மூலம் தியாகராஜரின் கிருதிகளைப் பாடக்கேட்டு, அந்த நடையில் தீட்சிதரும் சில கிருதிகளை இயற்ற முற்பட்டுள்ளார். 'நந்தனார் சரித்திரக் கீர்த்தனைகளைச் செய்த' கோபால கிருஷ்ண பாரதியாரும் தியாகராஜரும் நண்பர்களாகப் பழகியுள்ளனர். தமிழ்க் கிருதிகளை இயற்றும் வாக்கேயக்காரரான கோபால கிருஷ்ண பாரதியின் 'சபாபதிக்கு வேறு தெய்வம், சமானமாகுமோ' என்ற ஆபோகி ராகக் கீர்த்தனையைக் கேட்டுத் தியாகராஜர் பெரிதும் மகிழ்ந்துள்ளார்.

### தியாகராஜரின் சாதனை

தியாகராஜர் 'மனிதனைப் பாடமாட்டேன்' என்று கூறி மறுத்து வந்த போதிலும் மனிதனின் பெருமைகளையும், தகுதிகளையும், அவர் என்றுமே மதிக்கத் தயங்கியதில்லை. தியாகராஜரின் இசைக்கு ஓர் அளவிட முடியாத சக்தி இருந்தது. ஒருமுறை அவர் புதுக்கோட்டையில் உள்ள இராமசந்திரத் தொண்டைமானின் சமஸ்தானத்தில் பாடுவதற்காகச் சென்றிருந்தார். அப்பொழுது அவருக்கு வயது பதினெட்டு இருக்கும். இவர் பாடும் சபைக்கருகே ஒரு குத்துவிளக்கை வைத்து, அதில் திரியும், நெய்யும் இடப்பட்டிருந்தன. தியாகராஜர் இசைபாடி, அந்த இசையின் சக்தியால் விளக்கை ஏற்ற வேண்டுமென்று அவருக்குப் போட்டி வைக்கப்பட்டது. அவர் குருவை வணங்கிவிட்டு, ஜோதீஸ்வரூபினி ராகத்தைச் சிறிது நேரம் பாடினார். அவர் பாடி முடியும் போது, அந்தக் குத்துவிளக்கில் ஜோதி தோன்றி, விளக்கு எரியத் தொடங்கியது. எனவே இசைபாடி ஜோதியை ஏற்றிய பெருமை தியாகராஜருக்கு உண்டு.

### தியாகராஜர் சேசய்யருக்கு உயிர் கொடுத்தல்

தியாகராஜர் திருப்பதி யாத்திரையை முடித்துக்கொண்டு திரும்பும்பொழுது புத்தூர் கோயிலுக்குச் சென்றார். அப்பொழுது அங்கே மக்கள் ஒரே கூட்டமாகக் கூடியிருந்தனர். அங்கே ஒரு பெண் கதறி அழுது கொண்டிருந்தார். விசாரித்த பொழுது திருப்பதிக்குத் தன் குடும்பத்தோடு யாத்திரை செய்து கொண்டிருந்த சேசைய்யா என்ற அந்தணர் இரவு கோயிலில் தங்கியிருந்தபொழுது கோயில் கிணற்றில் தவறி விழுந்து இறந்து விட்டார் என்று கூறினர். இந்த நிகழ்ச்சி தியாகராஜரின் மனத்தில் பெரும் வேதனையை உண்டு பண்ணியது. உடனே அவர் பிணத்தின் அருகே சென்று 'நாஜீவாதார நாநேரமுபலமா' என்ற பிலகரி ராகக் கீர்த்தனையை உருக்கமாகப் பாடி, அதன் மீது துளசி தீர்த்தத்தைத் தெளித்தார். உடனே பிணமாக இருந்த சேசைய்யா உயிர் பெற்று எழுந்தார்.

எனவே தியாகராஜரின் இசையில் ஓர் அளவிட முடியாத ஆற்றல் இருந்தது. ஒரு சக்தி வாய்ந்த இசைக் கலைஞர், தமது சக்தி வாய்ந்த இசையை எவ்வாறு சாதாரண விஷயங்களுக்காகப் பயன்படுத்த முடியும்?

அவர் மற்றவர்களைப் போல் அழியும் ஜென்மமான மனிதனைப் பாடுவதை விடுத்துப் பரம்பொருளாகிய இறைவனைப் பாடுவதையே தமது குறிக்கோளாகக் கொண்டிருந்தார். அதனால் இவரது புகழ் உலகம் முழுவதும் பரவத் தொடங்கியது. எனவே ஸ்ரீதியாகராஜரின் உலகளாவிய இசைப் புகழுக்கு அடிப்படைக்காரணமாக இருந்தது அவரது

'மனிதனைப் பாடாமை' என்னும் கொள்கையே ஆகும் என்பது நன்கு விளங்குகின்றது.

# 5. தியாகராஜரின் இசைப்பாடல்கள்

தமிழகத்தில் தஞ்சை மாவட்டம் என்றாலே அது இசைக்குப் பெயர் பெற்ற இடம். அப்பைய தீட்சிதரும், தியாகராஜரும் அங்குப் பிறந்ததால், தஞ்சை மாவட்டம் மேலும் பெருமை பெற்று விளங்கியது. அதனால் தான் தஞ்சை ஒரு சிறந்த இசைப் பீடமாகக் கருதப்பட்டு வருகின்றது. தியாகராஜரின் காலத்துக்கு முன்பு வரை அங்கு சௌக்கம் வீரபத்ர ஐயர், பச்சிமிரியம் ஆதியப்பையர், சொண்டி வெங்கடசுப்பையர், ராமசாமி தீட்சிதர், மெலட்டூர் வெங்கட்ராம சாஸ்திரிகள் போன்றோர் தோன்றி இசைக்கலையை நன்கு வளர்த்து வந்துள்ளனர்.

*தியாகராஜரின் காலத்திற்கு முன்பு இசை*

தியாகராஜரின் காலத்திற்கு முன்பு வரை இசைக்கலைஞர்கள் எல்லாம் மனோதர்ம சங்கீதத்தில் தான் நிபுணர்களாக இருந்தனர். சங்கீதக் கச்சேரிகளில் மிகுதியான நேரம் இராக ஆலாபனை பாடவும், பல்லவி பாடவும், நிரவல் பாடவும், கற்பனை சுரம் பாடவும் என்றே தங்கள் நேரத்தை ஒதுக்கிக் கொண்டனர்.

அதாவது 10 மணி நேரம் ஒரு இசைக் கச்சேரி நடக்கிறது என்றால், அதில் ஏதாவது ஒரு ராகத்தை எடுத்துக் கொண்டு 8 மணி நேரம் இராக ஆலாபனை செய்வர். பிறகு அந்த இராகத்தில் பல்லவி பாடி, நிரவல் பாடி, கற்பனைச்சுரம் பாடி, பிறகு அந்நிய ராகங்கள் வரும்படி இராகமாலிகை பாடி, பிறகு முடியப் போகும் நேரத்தில் ஏதாவது அஷ்டபதி, தரங்கம் பாடுவது வழக்கமாகும்.

சில சங்கீத வித்துவான்கள், சில குறிப்பிட்ட ராகங்களை விஸ்தாரமாகப் பாடியே புகழ்பெற்றுள்ளார்கள். அதனால் அந்த ராகங் களாலேயே அவர்கள் பட்டப் பெயராகச் சொல்லி அழைக்கப்படுகின்றனர். தோடி சீத்தாராம ஐயர், அடானா அப்பையர், சங்கராபரணம் நரசய்யர், தர்பார் சீத்தாராம ஐயர் போன்றோர் இவர்களில் முக்கியமானவர்கள் ஆவார்கள்.

பின்பு 15 –ஆம் நூற்றாண்டில் தோன்றிய சங்கீத பிதாமகர் புரந்தரதாசர் கீதங்களையும், பதங்களையும் இயற்றத் தொடங்குகின்றார். 'பதகவிதாபிதாமகர்' தாளப்பாக்கம் அன்னமாச்சாரியார் சங்கீர்த்தனங்களை

*தியாகராஜரின் சாதனை*

தியாகராஜர் 'மனிதனைப் பாடமாட்டேன்' என்று கூறி மறுத்து வந்த போதிலும் மனிதனின் பெருமைகளையும், தகுதிகளையும், அவர் என்றுமே மதிக்கத் தயங்கியதில்லை. தியாகராஜரின் இசைக்கு ஓர் அளவிட முடியாத சக்தி இருந்தது. ஒருமுறை அவர் புதுக்கோட்டையில் உள்ள இராமசந்திரத் தொண்டைமானின் சமஸ்தானத்தில் பாடுவதற்காகச் சென்றிருந்தார். அப்பொழுது அவருக்கு வயது பதினெட்டு இருக்கும். இவர் பாடும் சபைக்கருகே ஒரு குத்துவிளக்கை வைத்து, அதில் திரியும், நெய்யும் இடப்பட்டிருந்தன. தியாகராஜர் இசைபாடி, அந்த இசையின் சக்தியால் விளக்கை ஏற்ற வேண்டுமென்று அவருக்குப் போட்டி வைக்கப்பட்டது. அவர் குருவை வணங்கிவிட்டு, ஜோதீஸ்வரூபினி ராகத்தைச் சிறிது நேரம் பாடினார். அவர் பாடி முடியும் போது, அந்தக் குத்துவிளக்கில் ஜோதி தோன்றி, விளக்கு எரியத் தொடங்கியது. எனவே இசைபாடி ஜோதியை ஏற்றிய பெருமை தியாகராஜருக்கு உண்டு.

*தியாகராஜர் சேசய்யருக்கு உயிர் கொடுத்தல்*

தியாகராஜர் திருப்பதி யாத்திரையை முடித்துக்கொண்டு திரும்பும்பொழுது புத்தூர் கோயிலுக்குச் சென்றார். அப்பொழுது அங்கே மக்கள் ஒரே கூட்டமாகக் கூடியிருந்தனர். அங்கே ஒரு பெண் கதறி அழுது கொண்டிருந்தார். விசாரித்த பொழுது திருப்பதிக்குத் தன் குடும்பத்தோடு யாத்திரை செய்து கொண்டிருந்த சேசைய்யா என்ற அந்தணர் இரவு கோயிலில் தங்கியிருந்தபொழுது கோயில் கிணற்றில் தவறி விழுந்து இறந்து விட்டார் என்று கூறினர். இந்த நிகழ்ச்சி தியாகராஜரின் மனத்தில் பெரும் வேதனையை உண்டு பண்ணியது. உடனே அவர் பிணத்தின் அருகே சென்று 'நாஜீவாதார நாநேரமுபலமா' என்ற பிலகரி ராகக் கீர்த்தனையை உருக்கமாகப் பாடி, அதன் மீது துளசி தீர்த்தத்தைத் தெளித்தார். உடனே பிணமாக இருந்த சேசைய்யா உயிர் பெற்று எழுந்தார்.

எனவே தியாகராஜரின் இசையில் ஓர் அளவிட முடியாத ஆற்றல் இருந்தது. ஒரு சக்தி வாய்ந்த இசைக் கலைஞர், தமது சக்தி வாய்ந்த இசையை எவ்வாறு சாதாரண விஷயங்களுக்காகப் பயன்படுத்த முடியும்?

இயற்றத் தொடங்குகின்றார். இவைகளைக் கொண்டு தாளப்பாக்கம் சின்னையா பஜனை பத்ததிக்கு வழி வகுக்கின்றார். எனவே தியாகராஜரின் காலத்தில், இறைவனின் பெருமைகளைப் பாடித்துதிக்கும் பஜனை நிகழ்ச்சிகளில் பாகவதர்கள் பாடி வருகின்றனர்.

### *விளம்ப காலமும், பஜனைப் பத்ததியும்*

பழைய இசை நிகழ்ச்சிகளில் எல்லாம் சௌக்க காலங்களில் தான் இசை உருப்படிகள் பாடப்பட்டு வந்தன. பின்பு பஜனை நிகழ்சிகளில் எல்லாம் மத்திம காலத்தில் சங்கீர்த்தனங்கள் பாடப்பட்டு வந்தன. இவை இரண்டிற்கும் உள்ள வித்தியாசங்களைத் தியாகராஜர் கூர்ந்து கவனிக்க முற்பட்டார். மணிக்கணக்காக இராக ஆலாபனை செய்யும் நிகழ்ச்சிகளை விட சிறுபாடல்களாகப் பாடப்படும் பஜனை நிகழ்ச்சிகளில் மக்கள் பெரிதும் கவர்ந்திழுக்கப்பட்டனர். பஜனைப் பாடல்களில் இராகபாவம் குறைவாக இருந்த போதிலும், மக்கள் அதனை ஆர்வமுடன் கற்று, தங்கள் வீடுகளிலும் பஜனைகளிலும் பாடிவருவதைக் கண்டார். எனவே இறைவனின் பெருமைகளைப் பாடவும், இசையை வளர்க்கவும் சிறியவகைக் கீர்த்தனைகளே சிறந்தது என்ற உண்மையை உணர்ந்தார்.

எனவே, தியாகராஜர் சங்கீத பாவம், சாதித்யபாவம், பக்திபாவம் ஆகிய மூன்றும் நிறைந்த கீர்த்தனைகளை இயற்றிப் பாடத் துவங்கினார். இராகபாவத்தைக் கீர்த்தனைகளில் புகுத்த முற்படும்பொழுது அவருக்குச் சங்கதிகள் போடவேண்டும் என்ற உணர்வு ஏற்படுகின்றது. எனவே அவர் முதன் முதலாகச் 'சங்கதிகள் போட்டுப் பாடும் முறையில்' கீர்த்தனைகளை இயற்றத் தொடங்குகின்றார்.

### *தியாகராஜரின் முதல் பாடல்*

'நமோ நமோ ராகவாய அனிசம்' என்ற தேஷ்யத் தோடி ராகக் கீர்த்தனையே தியாகராஜரின் முதல்படைப்பாகும். இதனைத் தொடர்ந்து இவர் பல திவ்யநாமக் கீர்த்தனைகளை வடமொழியில் இயற்றிப் பாடத் தொடங்குகின்றார். இதனைக் கவனித்த இவரது தந்தை இராமப் பிரம்மம், இவைகளையெல்லாம் எழுதி எடுத்துக்கொண்டு சென்று ராமசேஷ சாஸ்திரி, பாஷ்யம் கிருஷ்ண சாஸ்திரி போன்ற வடமொழி

வித்துவான்களிடம் காட்டுகின்றார். அவர்கள் இப்பாடலின் தரத்தை உணர்ந்து பாராட்டுகின்றனர். அன்று முதல் தியாகராஜரின் பெற்றோர்கள் இவரை ஊக்கப்படுத்தியும், இவரது பாடல்களை எழுதி வைத்துப் பாதுகாத்தும் வருகின்றனர். பின்பு இவர் சொண்டி வெங்கடரமனைய்பாவிடம் இசை பயிற்சிக்குச் சென்றபிறகு பலவகையான கிருதிகளையும் இயற்றிப்பாடத் தொடங்குகின்றார்.

*பலவகையான இசை உருப்படிகள்*

தியாகராஜர் தொடக்க கால இசை மாணவர்களும் எளிதாகப்பாடக்கூடிய "ஸ்ரீபதே நீ பத, ஸரஸரஸமனரக்கு சுர" விலிருந்து பெரிய வித்துவான்கள் அருமையாகப் பாடி மகிழும் பஞ்சரத்தினக் கீர்த்தனைகள் வரையிலும் ஏராளமான கிருதிகளைப் பாடியுள்ளார். இசையும் சாகித்தியமும் எளிய முறையில் அமைந்த பஜனைப் பாடல்களாகிய திவ்விய நாமக் கீர்த்தனைகளைப் பாடியுள்ளார்; உத்சவ சம்பிரதாயக் கீர்த்தனைகளைப் பாடியுள்ளார்; 'சீதாராம விஜயம், பிரகலாத பக்தி விஜயம். நௌக சரித்திரம்' ஆகிய இசை நாடகங்களை எழுதியுள்ளார். இந்த உருப்படிகள் எல்லாம் இன்றும் வழக்கத்தில் உள்ளன. 'பஞ்சரத்னக் கீர்த்தனைகள்' என்ற இசைவகையைப் பாடி சாகித்தியம் அமைப்பதில் தமக்குள்ள பெரும் ஆற்றலை வெளிப்படுத்தியுள்ளார்.

தியாகராஜரை ஒரு பன்மொழிப் புலவர் என்று கூறலாம். அவருக்கு மொத்தம் ஐந்து மொழிகளில் தேர்ச்சியுண்டு. அதாவது தெலுங்கு, மராட்டி, தமிழ், சமஸ்கிருதம், ஹிந்தி முதலிய அனைத்து மொழிகளிலுமே அவர் புலமை பெற்று விளங்கினார். இந்தி மொழியில் எழுதப்பட்ட இராமாயணமான துளசிதாசரின் 'ராம சரித மானசம்' பற்றித் தியாகராஜர் தமது 'பிரகலாத பக்தி விஜயம்' இசை நாடகத்தில் மிகவும் சிறப்பாகப் போற்றிப்பாடுகின்றார்.

*சுந்தரத்தெலுங்கினில் பாட்டிசைத்தவர்*

இசையும், சாகித்யமும் இயற்கையாக உடன் வெளிப்பட்டுக் கிருதிகள் பாடப்பட்டதால், தியாகராஜரின் பாடல்கள் தனிச்சிறப்புடன் விளங்குகின்றன. தத்துவக் கருத்துகளுடன் காவிய அழகு கொஞ்சும் இவரது பாடல்கள் சாகாவரம் பெற்ற இலக்கியப் படைப்புகளாகும். இவரது

எளிய, இனிய சுந்தரத் தெலுங்கு மொழிப் பாடல்களைக் கேட்டே கவியரசர் பாரதியார், 'சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்து' என்று அம்மொழிக்கு சிறப்பினைக் கொடுக்கின்றார். வடமொழிப் புலமையுடன் விளங்கும் இவரது கிருதிகளும் சிறப்பு வாய்ந்தவை. சாதாரணப் பழமொழிகள், வழக்காறுகள் முதல் உயர்ந்த உபநிடதக் கருத்துகள் வரை இவரது பாடல்களில் ஒருங்கே காணலாம்.

ஒரு பாடலில் (ஆரபிராகம்) 'காலம் போகும், வார்த்தைகள் நிற்கும்' என்கிறார். மற்றொரு (ஜனரஞ்சனி ராகப்) பாடலில் 'தலைக்கு வந்தது தலைப்பாகையுடன் போயிற்று' என்கிறார். (ஸ்வராவலி ராகப்பாடலில்) 'என் தலைவிதி இப்படி இருக்க, நாம் ஒருவரைச் சொல்வதில் பயனில்லை' என்கின்றார். ஒரு (சங்கராபரணம் ராகப்) பாடலில் 'நான் உபகாரியாய் இருந்தாலும், அவர்கள் எனக்கு அபகாரியானார்கள்' என்கிறார்.

*பழமொழிகளையும் வைத்துப் பாடியவர்*

ஒரு (காபி ராகப்)பாடலில், 'தன் மகள் பிரசவ வேதனையினால் தவிப்பதைக் கண்டு, மருமகன் மீது ஆங்காரப்படுவதேன்' என்கிறார். பிறிதொரு (நாட்டைக்குறிஞ்சி) பாடலில் 'செவிடனுக்கு உபதேசித்தது போல்' என்று சாதாரண வழக்காறுகளையும் தமது பாடலில் சேர்த்துப் பாடுகின்றார். நாம் 'கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல்' என்று தானே பழமொழி கூறுவோம். அதையே தியாகராஜர், 'நீராடுவதற்காகப் போன தீர்த்தம், எதிரில் வந்தது போல' என்று எளிய வழக்காறாகக் கூறுகின்றார்.

*ஒரு சொல், ஒரு வில், ஒரு இல்*

உயர்ந்த உபநிடதக் கருத்துக்களும், வாழ்க்கைத் தத்துவங்களும் தியாகராஜரின் பாடல்களில் மிக எளிமையாக விளங்குவதைக் காணலாம்.

ஒரு (அரிகாம்போதி ராகப்)பாடலில் "ஒக மாட, ஒக பாண, ஒக பத்தினி, வரதுடே மனசா" என்று கூறுகின்றார். 'இராமன் ஒரு சொல்லைத்தான் சொல்லுவான், ஒரு வில்லைத்தான் வைத்திருப்பான், ஒரு மனைவியோடு தான் வாழ்ந்து வந்தான். அதுவே நல்லறத்தின் சான்றாகும் என்று கூறுகின்றார். ஏதோ இந்த 'ஒரு சொல், ஒரு வில், ஒரு இல்' விவகாரம் எல்லாம் ஊருக்குத்தான் உபதேசம், நமக்கல்ல என்று வித்தியாசமாக

நினைக்கும் இன்றைய சூழலில் அவர் சொன்னது போலவே வாழ்ந்தும் காட்டியுள்ளார். தியாகராஜர் தமது 18 – ஆம் வயதில் பார்வதி என்ற பெண்ணை மணந்து கொண்டார். ஐந்து வருடங்களுக்குப் பிறகு அவர் நோய்வாய்ப்பட்டு இறந்து விடவே மற்றவர்களின் வற்புறுத்தலின் காரணமாகப் பார்வதியின் தங்கையாகிய கமலாம்பாளை மணந்தார். என்றாலும் அவர் முதல் மனைவியாகிய பார்வதியம்மாளின் மேலிருந்த அபிமானத்தால் தனது இரண்டாம் மனைவியாகிய கமலாம்பாளையும் 'பார்வதி' என்றே அழைப்பாராம்.

### *ராமனைப் போலவே வாழ்ந்து காட்டியவர்*

தியாகராஜர் தம் இல்வாழ்க்கையில் 'பார்வதி' என்ற ஒரே பெண்ணுடன் முழுமை பெற்று மங்கலமாக முடிந்துவிட்டது என்று நினைக்கின்றார் போலும். அதனால் தமது கச்சேரிகளில் மங்கலம் பாடி நிறுத்தும் பொழுது,

"சீதாம்பா கர்ப ஜாதாய பார்வதீ கமலேதீச

த்விபார்ய ஸம்யுதக்தாய ஸ்ரீதியாகரா ஜாய மங்கலம்!"

என்று பாடி முடிக்கின்றார். தியாகராஜர் கண்டது எல்லாம் 'தாய் சீத்தம்மா, முதல் மனைவி பார்வதி, இரண்டாவது மனைவி கமலாம்பாள் , அவர்களுக்குப் பிறந்த மகள் சீதாலெட்சுமி' ஆகியோரைத்தான். இவர்களைத் தவிர, அவர் வேறு ஒரு பெண்ணைக் கண்ணால் ஏறிட்டுக் கூடப் பார்த்தது கிடையாது. எனவே தம் பாடல்களில் சொன்னது போலவே, அவர் வாழ்ந்தும் காட்டினார். அதனால் தான் அவரது புகழ் உலகம் எங்கும் பரவத் தொடங்குகின்றது.

### *கருணை ரசம் பொழியும் பாடல்கள்*

ஆங்கிலக் கவிஞன் ஷெல்லி கூறுவான் "Our Sweetest Songs are Those That tell of our Saddest Thoughts" என்று. அதாவது "உலகில் உள்ள மிக நல்ல பாடல்கள் எல்லாம் அவல ரசத்தை வெளிப்படுத்துவனவாக இருக்கின்றனவாம்". அவ்வாறே நமது தியாகராஜரின் கிருதிகளிலும் 'கருணை ரசம்' அலை அலையாக நெளியும் காட்சிகள் அற்புதமாக இருக்கின்றன. சாகித்தியங்களின் கருத்துச் செறிவும், உணர்வுக்குப்

பொருத்தமாக அமைக்கப்பட்ட இராகங்களும் மெருகூட்டுகின்றன. எனவே தியாகபிரம்மத்தின் கிருதிகளில் 'பாவம்' முழுமையாக நிறைந்திருக்கின்றன என்று கூறலாம்.

*தியாகராஜர் ஓர் இசைக்கருவூலம்*

தியாகராஜரின் பரடல்களில் பல்லவிகளிலேயே இராகபாவம் முழுமையாக வெளிப்பட்டுவிடும். இவரது கிருதிகளில் நிரவல் செய்வதற்கும், கற்பனைச்சுரம் வைத்து விரிவாகப் பாடுவதற்கும் என்று ஏற்ற இடங்களே தனியாக உள்ளன. கர்நாடக சங்கீத உலகில் வழிவழியாக வாழ்ந்து வரும் இவருடைய கிருதிகள், சங்கீதப் பயிற்சிக்கும், இசை நிகழ்ச்சிகளுக்கும் மிக இன்றியமையாதவையாக உள்ளன. அறிஞர்கள் இவருடைய பாடல்கள் அனைத்தையும் 'தியாக பிரம்மோப நிஷத்' என்று சிறப்பாகப் போற்றுகின்றனர்.

தியாகராஜர் 22 சுருதிகளையும், பிரகிருதி, விக்ருதி சுரங்களையும் நன்கு அறிந்தவர்; 21 மூர்ச்சனைகளையும், 10 வகையான கமகங்களையும் நன்கு கற்றுத் தேர்ந்தவர்; 72 மேளகர்த்தாக்களையும், அதன் ஜன்ய ராகங்களையும் நுணுக்கமாகப் பாடி வெளிக்கொணர்ந்தவர். குந்தலவராளி, ரஞ்சனி, ஜீஜாவளி, கன்னடகௌளனை பகுதாரி, விஜய ஸ்ரீ, நவரச கன்னட, சாருமதி போன்ற அபூர்வமான ராகங்களையும் கையாண்டு நிலை நிறுத்தச் செய்தவர்.

சங்கீதத் துறையில் வல்லுநர்களாயிருந்த புகழ்பெற்ற வாக்கேயக்காரர்களையும் விஞ்சி தியாகராஜர் ஒவ்வொரு ராகங்களிலும் 20,30 உருப்படிகளுக்குக் குறையாமல் கிருதிகளைப் பாடியுள்ளார். விஸ்தாரமாகப் பாட இடமளிக்காத சகானா, சுத்தசாவேரி, ஆரபி போன்ற இராகங்களிலும் இவர் பல உருப்படிகளை இயற்றியுள்ளார்.

உதாரணத்திற்கு மோகன ராகத்தை எடுத்துக் கொண்டால், அதில் ஆதிதாளத்தில் மட்டுமே 'நன்னு பாலிம்பா, பவனுத, மோகனராமா, ராம நினு நிம்மினா, எந்துகுபாக தெலியாது' என்ற ஐந்து உருப்படிகளையும், சாபுதாளத்தில் 'எவருரா, வேதவாக்யமுனி' முதலிய இரண்டு கிருதிகளையும் கண்ட சாபுதாளத்தில் 'தயராணி' என்ற கிருதியும், ஜம்பை தாளத்தில்

'ஜெயமங்கலம்' என்ற கிருதியும் என்று மொத்தம் 9 உருப்படிகளைச் செய்துள்ளார் தியாகராஜர். இவருடைய பாடல்களில் சகலவிதமான பிரயோகங்களையும், யதிப் பிரஸ்தாரங்களையும் நாம் காண முடிகின்றது.

இவருடைய மாயாமாளவகௌள ராகக்கிருதியான 'விதுலகும்ரொக்கேதா' என்ற பாடலின் சரணத்தில் தமது காலத்தில் வாழ்ந்த இலட்சணக்காரர்களின் பெயர்களையெல்லாம் பட்டியலிட்டுப் போற்றுகின்றார்.

*இராமாயணத்தைக் கீர்த்தனை வடிவில் தந்தவர்*

இராமாயணம் என்றதும், வடமொழியில் இராமாயணம் எழுதிய வான்மீகி முனிவர்தான் நமது கண்முன் நிற்பார். அதற்குக் காரணம் அவர் 24,000 சுலோகங்களில் இராமாயணக் கதை முழுவதையும் நமக்குக் கூறிவிடுகின்றார். அதே வழியைப் பின்பற்றிய தியாகராஜரும் 24,000 கீர்த்தனைகளில் ஸ்ரீராமனின் முழு வரலாற்றையும் கூறி விளக்குகின்றார். அதனால் தான் நாம், தியாகராஜரை 'வான்மீகி முனிவரின் மறு அவதாரம்' என்று போற் றுகின்றோம். அவருக்கும் அதனால்தான் உலகளாவிய இசைப் புகழ் கிடைக்கின்றது.

*பஞ்சரத்தினங்களான இசை உருப்படிகள்*

தியாகராஜரின் பஞ்சரத்தினக் கீர்த்தனைகளையே தான் எடுத்துக்கொள்வோமே? அவர் முதலில் இயற்றியது கனராக பஞ்சரத்தினக் கீர்த்தனையாகும். இது 'நாட்டை, கௌளை, ஆரபி, ஸ்ரீராகம், வராளி,' ஆகிய ஐந்து இராகங்களில் அமைக்கப்பட்டிருக்கின்றது. இதனைத் தொகுதிக் கீர்த்தனைகள் என்றும், சமுதாயக் கீர்த்தனைகள் என்றும், கொத்துக் கீர்த்தனைகள் என்றும் நாம் கூறுகின்றோம். ஒரு நாள் தியாகராஜரிடம் அவருடைய மாணவர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து தாங்கள் கச்சேரியின் தொடக்கத்தில் பாடும்படியான தான வர்ணங்களையும் இயற்றவேண்டும் என்று வேண்டுகின்றனர். அப்பொழுது தோன்றியவைதான் இந்த பஞ்சரத்தினக் கீர்த்தனைகள். தியாகராஜரின் காலத்தில் இது அவரது உஞ்சவிருத்தியில் பாடப்பட்டது. இன்று அவரது ஆராதனை விழாக்களில் பாடப்பட்டு வருகின்றது.

கனராக பஞ்சரத்தினத்தில் எவ்வாறு 'ஐந்து ரத்தினங்களாக, ஐந்து கீர்த்தனைகள் உள்ளதோ' அதே போன்று ஐந்து வகையான பஞ்சரத்தினக் கீர்த்தனைகளையும் தியாகராஜர் இயற்றியுள்ளார். அது கனராகப் பஞ்சரத்தினம், கோவூர் பஞ்சரத்தினம், திருவெற்றியூர் பஞ்சரத்தனம், லால்குடி பஞ்சரத்தினம், ஸ்ரீரங்கப் பஞ்சரத்தினம் என்று ஐந்து ரத்தினக் குவியல்களாகும்.

*உஞ்சவிருத்தியும், பஜனைக் கச்சேரியும்*

தியாகராஜர் தமது கிருதிகளை எல்லாம் உஞ்ச விருத்திப் பஜனைகளிலும், தினசரி பஜனைகளிலும் பாடுவது வழக்கம். தியாகராஜருக்குக் கனத்த சாரீரம் உண்டு. மிக உயர்ந்த குரலில் பாடுவார். எனவே இதனைக் 'காந்தர்வ சாரீரம்' என்று எல்லோரும் பாராட்டுவார்கள். தினசரி பஜனைகள், இரவு நெடுநேரம் வரையிலும் கூட நீண்டு விடுவதுண்டு. முதல்பகுதி நேரத்தில் தியாகராஜரும், அவரது மாணவர்களும் பாடுவார்கள். பிறகு வெளியூர்களிலிருந்து வந்திருக்கும் வாக்கேயக்காரர்களையும், பாகவதர்களையும் பாடச் சொல்லிக் கேட்டு மகிழ்வர். பிறகு கடைசிப்பகுதி நேரத்தில் மீண்டும் தியாகராஜரும், அவருடைய மாணவர்களும் பாடுவது வழக்கமாகும். இந்நிகழ்ச்சிகளில் தியாகராஜரின் அனைத்துக் கிருதிகளும் பாடப்பட்டு வந்ததால் எல்லோரும் ரசிக்கவும், அவரது கீர்த்தனைகளைப் பாடம் செய்து கொள்ளவும் இது வாய்ப்பாக இருந்தது.

இந்தியாவில் பல இடங்களில் இருந்தும் சங்கீத வித்துவான்கள் தியாகராஜரின் வீட்டிற்கு விருந்தினர்களாக வந்து தங்குவதுண்டு. அவர்கள் தியாகராஜரின் பாடல்களைக் கேட்டு ரசிப்பதும், அவைகளைக் கற்றுச் செல்வதுமாக இருந்தனர். அவர்கள் மற்ற இடங்களுக்கும் சென்று தியாகராஜரின் இசைப்பாடல்களைப் பாடிப் பரப்பியதால், இவரது புகழ் உலகம் முழுவதும் பரவத் தொடங்கியது.

தியாகராஜர் மொத்தம் எண்பது ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருக்கின்றார். அதில் சதாகாலமும் இறைவனையே நினைத்து, அவரது புகழையே இசைப்பாடல்களாகப் பாடி வடிவமைத்துக் கொடுத்திருக்கின்றார். இன்று உலகம் முழுவதும் அவருடைய கிருதிகள்

பாடப்பட்டு வருகின்றன. எனவே தியாகராஜருடைய இசைப்பாடல்களால்தான் அவருக்கு உலகளாவிய புகழ் கிடைத்துள்ளது என்பது தெளிவாகின்றது.

*தியாகராஜரின் சமாதி*

பொதுவாகச் சந்நியாசிகளையும், மகான்களையும் அடக்கம் செய்யும்பொழுது, அவர்களுடைய திருச்சமாதியில் அவர்களுடைய இஷ்ட தெய்வங்களையே பிரதிஷ்டை செய்வது வழக்கம். ஆனால் மனிதனாகப் பிறந்து, 'தம்முடைய நாதோபாசனையால் பரம்பொருளுடன் ஒன்றிக் கலந்துவிட்ட' தியாகப் பிரம்மத்தின் திருச்சமாதியில் அவரது திருவுருவத்தினையல்லவா நாம் சிலையாக வைத்துள்ளோம்? 'நாதப் பிரம்மானந்தர்' என்றல்லவா இன்றும் தியாகராஜரை வழிபாடு செய்து வருகின்றோம்.

தியாகராஜரின் சிஷ்யப்பரம்பரையில் வந்த பெங்களூர் நாகரத்தினம் அம்மாளின் பெருமுயற்சியினால் தியாகராஜரின் திருச்சமாதி கோயிலாகக் கட்டி முடிக்கப்பட்டது. 1957–இல் கட்டி முடிக்கப்பட்ட வான்மீகி மண்டபத்தின் 140 பளிங்குக் கற்களில், தியாகராஜரின் அரிய கிருதிகள் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட்டுள்ளன.

இந்திய மண்ணின் முடிசூடா மன்னராகிய ஜவஹர்லால் நேரு அவர்கள் தியாகராஜரின் 114 வது ஆராதனை விழாவைப் பற்றிப் பாராட்டிப் பேசுகின்றார். அப்பொழுது அவர் கூறுகின்றார், "The work of this saint and the writer should be translated into other Indian languages" என்று கூறுகின்றார். 'தியாகராஜரின் படைப்புகளாகிய இசைப்பாடல்கள் அனைத்தையும் பிற இந்திய மொழிகளிலும் மொழி பெயர்க்க வேண்டும்' என்று நேரு பெருமகனார் பாராட்டுகின்றார். எனவே இத்தகைய ஒரு பெரும் புகழ் தியாகராஜருக்கு அவரது இசைப் பாடல்களால்தான் கிடைத்துள்ளது என்பதை நாம் நன்றாக உணர முடிகின்றது.

# 6. தியாகராஜரின் நன்மாணாக்கர்கள்

ஸ்ரீ தியாகராஜர், தமது வாழ்க்கையில் மிகவும் எளிமையாகவும், சாத்வீகமாகவும் வாழ்ந்தார். அதனால், அவருக்கு மோட்சம் கிடைக்கின்றது. தியாகராஜர், சதாகாலமும் இராமனையே பாடி, ,இராம பக்தியோடு வாழ்ந்தார். அதனால், ஸ்ரீராமனின் பாதாரவிந்தங்களில் இரண்டற ஒன்றிக் கலந்து விடுகின்றார். தியாகராஜர், பணத்திற்காக மனிதனைப் பாடுவதை வெறுத்தார். அதனால், பற்றற்ற வாழ்க்கையை வாழ்ந்து இந்தப் பிறவிப் பெருங்கடலை நீந்திக் கடந்தார். தியாகராஜர், சிறந்த இசைப்பாடல்களை இயற்றினார். அதனால் கடல் போன்ற இந்தச் சங்கீதக் கலையைத் தமது சிறிய கிருதி வடிவங்களுக்குள் அடக்கிச் சாதனை படைக்கின்றார். இவற்றால் எல்லாம் இவருக்கு உலகளாவிய இசைப்புகழ் கிடைக்கவில்லை. தியாகராஜர், சிறந்த நன்மாணாக்கர்களைப் பெற்றிருந்தார். அதனால்தான் இன்று இந்த உலகம் முழுவதும் புகழும் படியாக இசை உலகில் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்.

*தியாகராஜரின் நன்மாணாக்கர்கள்*

ஒரு குடும்பம் நல்ல சந்ததியாரைப் பெற்றிருந்தால் தான் அந்தக் குடும்பத்தின் புகழ் ஊர் முழுவதும் சென்று பரவத் தொடங்குகின்றது. அதே போன்று தியாகராஜரும் பல நன்மாணாக்கர்களைப் பெற்றிருந்தால்தான் அவருடைய புகழ் இந்த உலகம் முழுவதும் சென்று பரவியுள்ளது.

உதாரணத்திற்கு புரந்தரதாசரை எடுத்துக் கொள்வோமா? அவர் தமது 'வாசுதேவ நாமாவளிய' என்ற உருப்படியில், தாம் 4,75,000 கிருதிகளைச் செய்துள்ளதாகக் கூறுகின்றார். அவரைக் கர்நாடக 'சங்கீதப் பிதாமகர், ஆதிகுரு' என்றெல்லாம் புனைபெயர் கொடுத்து அழைப்பதோடு சரி. ஆனால் அவருடைய ஐந்து லட்சம் கிருதிகளும் எங்கே போயின? அவருக்கு நல்ல சிஷ்யப் பரம்பரை இல்லை. அதனால்தான் அவருடைய கிருதிகள் எல்லாம் அவருடனேயே மறைந்து போய்விட்டன. நாம் அவருடைய 'சரளி வரிசைகளைதானே இன்று நடைமுறையில் பயன்படுத்திக் கொண்டிருக்கின்றோம்.

புரந்தரதாசர் 1484–ஆம் ஆண்டு முதல் 1564–ஆம் ஆண்டு வரை மொத்தம் 80 ஆண்டுகள் வாழ்ந்திருக்கின்றனர். அவ்வாறே தியாகராஜரும் 1767–ஆம் ஆண்டு முதல் 1847–ஆம் ஆண்டு வரை மொத்தம் 80 ஆண்டுகள் வாழ்ந்திருக்கின்றார். ஆனால் 5 லட்சம் உருப்படிகள் பாடிய புரந்தரதாசரின் கிருதிகள் அவர் காலத்திலேயே மறைந்து போய் விட்டன. ஆனால் 24,000 கீர்த்தனைகளே பாடிய தியாகராஜரின் புகழ் இன்று உலகம் முழுவதும் பரவியுள்ளது. இதற்குக் காரணம் தியாகராஜரின் நன்மாணாக்கர்களே ஆவர். மேலும் தியாகராஜர் தமது கடைசிக் காலத்தில் தாம் இதுவரை எத்தனைக் கிருதிகளை இயற்றி முடித்துள்ளோம் என்பதைக் கணக்கிட்டுப் பார்க்க வேண்டும் என்று நினைக்கின்றார். அப்பொழுது தியாகராஜரே என்ன செய்தார் தெரியுமா? தாம் இதுவரை இயற்றிய கிருதிகளுக்கென்று அவர் எந்தவிதமான கணக்கும் வைத்திருக்கவில்லை. எனவே அவர் தம்மிடத்தில் சங்கீதம் படித்த எல்லா மாணவர்களையும் வரவழைக்கின்றார். அவர்களிடத்தில், தாம் எந்தெந்த ராகங்களில், என்னென்ன கிருதிகளையெல்லாம் இயற்றிக் கற்பித்து வந்துள்ளேன் என்பதைப் பாடிக்காட்டும்படிக் கூறுகின்றார். அவர்கள் தியாகராஜரின் தொடக்க காலத்திலும், இடைக்காலத்திலும், கடைசிக்காலத்திலும், இயற்றிய கிருதிகளையெல்லாம் பாடிக்கொண்டே வருகின்றனர். அவற்றைக் கொண்டு ஒரு கணக்கு எடுக்கப்படுகின்றது. தியாகராஜர் 120 ஜோடி மாணவர்களுக்கு, ஆளுக்கு 200 கீர்த்தனைகள் வீதம், மொத்தம் 24,000 கீர்த்தனைகளை இயற்றிக் கற்பித்து வைத்துள்ளார். ஆக, தியாகராஜருக்கே தம்முடைய உருப்படிகளையெல்லாம் கணக்கெடுப்பதற்குத் மாணாக்கர்களின் உதவி தேவைப்படுகிறதென்றால், பிற்காலத்தில் தியாகராஜரின் புகழ் உலகம் முழுவதும் சென்று பரவுவதற்கு அவருடைய நன் மாணாக்கர்களே முக்கியக் காரணம் என்பது நன்றாகத் தெரிய வருகின்றது.

தியாகராஜரிடம் நூற்றுக்கணக்கான மாணவர்கள் இசையைப் படித்துள்ளனர். அவர்களில் ஒரு சிலரின் பெயர்களை மட்டுமாவது இங்கே குறிப்பிட்டுத்தான் ஆக வேண்டும். வாலாஜா பேட்டை வெங்கட்ரமண பாகவதர், அவர் மகன் கிருஷ்ணசாமி பாகவதர், பல்லவி துரைசாமி ஐயர், அவர் மகன்களான கோவிந்த சிவன், சபாபதி சிவன், பல்லவி சீத்தாராமையர், தஞ்சாவூர் ராமாராவ், திருவெற்றியூர் வீணை குப்பையர், தில்லை ஸ்தானம் ராம அய்யங்கார், உமையாள்புரம் சுந்தரபாகவதர், கிருஷ்ண பாகவதர் சகோதரர்கள், மனம்புச்சாவடி வெங்கடசுப்பையர், லால்குடி சாமைய்யர், நெய்க்காரப்பட்டி சுப்பையர், கன்னையா பாகவதர்,

நங்காவரம் நீலகண்டய்யர், நேமம் சுப்பிரமணிய பாகவதர், சுப்பராம தீட்சிதர், திருவையாறு ஐயாவய்யர், செவுனா வெங்கடாஜலபதி பாகவதர், சித்தூர் இராதா கிருஷ்ணய்யர், கணேசய்யர், அமிர்தலிங்கம் பிள்ளை போன்றோர் அவர்களில் சிறப்பாகக் குறிப்பிடத்தகுந்தவர்கள் ஆவர்.

*தியாகராஜரிடம் மாணவர்கள் இசைப்பயிற்சிக்காகச் சேர்ந்த் நிகழ்ச்சிகள்*

தியாகராஜரின் மாணவர்களில் பலர் அவரிடம் சிட்சைக்குப் போவதற்கு முன்பே இசைக்கலையில் பாண்டியத்துவம் பெற்று விளங்கியவர்கள் ஆவர். இவர்கள் மேலும் தங்கள் இசைத்திறமையை வளர்த்துக் கொள்வதற்காகவே தியாகராஜரிடம் சென்று மாணவர்களாகச் சேருகின்றனர். இவர்கள் தியாகராஜரிடம் சென்று, சிட்சைக்காகச் சேர்ந்த நிகழ்ச்சிகள் எல்லாம் விசித்திரமாக இருக்கும்.

பல்லவி துரைசாமி ஐயர், தஞ்சை சரபோஜி மகாராஜா சமஸ்தானத்தில் வித்துவானாக இருந்தவர். சென்னையில் இவரது இசைத்திறமைக்காகப் பாராட்டி யானை மீது ஏற்றப்பட்டுச் சிறப்பிக்கப்பட்டவர். இவரும் இவரது நண்பர் பல்லவி சீத்தாரமையரும் போட்டி போட்டுக் கொண்டு பல்லவி பாடுவதில் வல்லவர்கள். இவர்கள் இருவரும் நாள்தோறும் தியாகராஜரின் வீட்டுத் தெருவழியாகக் காவிரியில் குளிக்கச் செல்வது வழக்கம். அப்பொழுது ஒருநாள் தியாகராஜர் சௌராஷ்டிரம் ராகத்தை ஆலாபனை செய்து கொண்டிருந்தார். அவரது மனோதர்ம சங்கீத ஞானத்தைப் பற்றிச் சரியாக அறிந்திராத இவர்கள், அத்திண்ணையிலேயே அமர்ந்து அவரது இசை முழுவதையும் கேட்டு ரசித்தனர். அவரது இராக ஆலாபனையையும், தாளத்தையும் முழுமையாகக் கேட்டுப் பிரமித்துப் போனதால் பின்பு மறுநாள் காலையில் அவரிடம் வந்து அவரைச் சரியாக மதிப்பிடாமல் திண்ணையில் அமர்ந்ததற்கு மன்னிக்கும்படி கேட்டனர். இந்நிகழ்ச்சிக்குப் பிறகு அவர்கள் இருவரும் தியாகராஜரிடம் மாணவர்களாக இருந்து அவரது கிருதிகளைக் கற்கத் தொடங்குகின்றனர். பிறகு பல்லவி துரைசாமி ஐயர் தமது மகன்களான கோவிந்த சிவன், சபாபதி சிவன் ஆகிய இருவரையும் தியாகராஜரிடமே சிட்சைக்கு அனுப்புகின்றார்.

திருவெற்றியூர் வீணை குப்பையர் வீணை சாம்பசிவ ஐயரின் மகன் ஆவார். அக்காலத்தில் சாம்பமூர்த்தி வீணை வாசிக்க, அதைச் சாம்பமூர்த்தியாகிய சிவபெருமானே நேரில் வந்து கேட்கவேண்டும் என்று பெருமையாகக் கூறுவார்களாம். அத்தகைய பரம்பரையில் வந்த வீணை குப்பையரும், வீணையை ஊர்த்தவ நிலையில் வைத்துக் கொண்டு வாசிப்பதில் வல்லவராம். பிடில் வாசிப்பதிலும் திறமை பெற்றிருந்தார். இவர் தியாகராஜரிடம் இசை படிக்கச் சென்ற போது சிறந்த பல்லவி வித்துவானாக இருந்தமையினால் இவர் பால் அன்பு கொண்டு தம்முடைய கிருதிகளையெல்லாம் நன்றாகச் சொல்லிக் கொடுத்தாராம் தியாகராஜர்.

தஞ்சாவூர் ராமாராவ் தியாகராஜரின் மாணவர்களிலேயே மிகவும் வயதானவர் ஆவார்.இவர் கடைசி வரை பிரம்மச்சாரியாகவே வாழ்ந்தார். தியாகராஜரிடம் சமமாகப் பழகக்கூடியவரும் இவர்தான். தியாகராஜரின் நேர்முகச் செயலாளர் போல இருந்தவர். மற்ற சக மாணவர்களுக்கும் தினசரி வேலையைப் பிரித்துக் கொடுப்பவர். திருப்பதித் தல யாத்திரையின் பொழுது, கடைசி வரை உடன் சென்று வந்தவர். இருவரும் தியாகராஜரின் பல கிருதிகளைக் கற்றுத் தேர்ந்தார். இவரது வேண்டுகோளுக்கிணங்கவே தியாகராஜர் தமது கனராகப் பஞ்சரத்தினக் கீர்த்தினைகளை இயற்றிப் பாடத் துவங்குகின்றார்.

### *தியாகராஜரின் முதல் மாணவர்*

கன்னையபாகவதரே தியாகராஜரின் முதல் மாணவர் ஆவார். இவர் தியாகராஜரிடம் பல கிருதிகளைக் கற்ற பின்பு, திருவனந்தபுரம் சென்று சவாதித்திருநாள் மகாராஜாவின் சமஸ்தானத்தில் வித்துவானாக இருக்கின்றார். இவர் மூலம் தியாகராஜரின் உருப்படிகளையும், தூயவாழ்க்கையினையும், புகழையும் கேட்ட சுவாதித்திருநாள் மகாராஜா தியாகராஜரை நேரில் பார்க்க வேண்டும் என்று விரும்புகின்றார். இதனால் திருவாங்கூர் சபைக்கு வந்து பாடுமாறு தியாகராஜரை அழைக்க வடிவேல் நட்டுவனார் தஞ்சைக்கு அனுப்பி வைக்கப்படுகின்றார். ஆனால் கடைசி வரை தியாகராஜர் சமஸ்தானத்திற்குச் சென்று பாட இசையவேயில்லை.

மனம்புச்சாவடி வெங்கட சுப்பையர் தியாகராஜரின் அத்தை மகன் ஆவார். இவர் தியாகராஜரிடம் இசையை நன்கு கற்றுத் தேர்ந்தார்.

தியாகராஜரின் மறைவிற்குப் பின்பும் இவர் பல ஆண்டுகள் திருவையாற்றிலேயே வசித்து வந்தார். இவரிடம் தியாகராஜரின் மகள் வயிற்றுப்பேரனாகிய பஞ்சாபகேசய்யர் இசையை நன்கு கற்றுத் தேர்ந்தார். இவரோடு தியாகராஜரின் குலமுறை முற்றுப் பெற்று விடுகின்றது.

*சங்கீத மும்மூர்த்திகளின் வாரிசுகள்*

சியாமாசாஸ்திரியின் மகனான சுப்பராய சாஸ்திரியும் தியாகராஜரிடம் இசையைப் படித்துள்ளார். முத்துசாமி தீட்சிதரின் தம்பி வயிற்றுப் பேரனான சுப்புராம தீட்சிதரும் தியாகராஜரிடம் இசையைப் படித்துள்ளார். எனவே, சங்கீத மும்மூர்த்திகளின் எல்லா வாரிசுகளுக்குமே இசைவளத்தை ஊட்டியவர் தியாகராஜரே ஆவார்.

உமையாள்புரம் கிருஷ்ண பாகவதர், 10 வயதிலும், சுந்தர பாகவதர் 8 வயதிலும் தியாகராஜரிடம் சிட்சைக்காக வந்து சேருகின்றார்கள். இவர்கள் சங்கீதம் படிக்க வந்ததே ஒரு தனிக்கதையாகும். இவர்களது மூத்த சகோதரர் வெங்கு பாகவதர் இராமாயணச் சொற்பொழிவாற்றுவதில் வல்லவர். இவர் திருவையாற்றுக்கு வந்து தங்கி, தொடர்ந்து ஆறு மாதங்கள் இராமாயண உபன்னியாசம் செய்து, தியாகராஜரின் நல்அபிமானத்தைப் பெறுகின்றார். பிறகு தம் இளைய சகோதரர்களை அனுப்பித் தியாகராஜரிடம் சிட்சைக்கு ஏற்பாடு செய்கின்றார்.

தொடக்கத்தில் சிறுவர்களாயிருந்ததால் ஒரு நாள் இவர்கள் குருவிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் தங்கள் ஊருக்குப் போய் விடுகின்றார்கள். சிறுவர்களைக் காணாததால் தியாகராஜர் பதறிக்கொண்டு உமையாள்புரத்திற்குக் கால்நடையாகவே நடந்து செல்கின்றார். அங்கே சிறுவர்கள் இருவரும் பத்திரமாகச் சென்று சேர்ந்திருப்பதைக் கண்ட பிறகு, வெங்கு பாகவதரிடம் கூறிவிட்டுத் தம் வீட்டிற்குத் திரும்பி வருகின்றார். மனம் வருந்திய வெங்கு பாகவதர், மீண்டும் தமது சகோதரர்களைத் தியாகராஜரிடம் சிட்சைக்கு அனுப்ப ஒரு தந்திரத்தைக் கையாளுகின்றார். தியாகராஜரைப் புகழும்படியாகப் பல அஷ்டகங்களை எழுதி முடித்தார். அவற்றை எடுத்துக் கொண்டு தமது சகோதரர்களையும் அழைத்துக் கொண்டு தியாகராஜரின் வீட்டிற்குச் செல்லுகின்றார். அங்கே தியாகராஜரின் முன்பு தமது

அஷ்டங்களையெல்லாம் பாடிக்காட்டி, அவரது அன்பைப் பெற்று மீண்டும் தமது சகோதரர்களுக்கு இசை கற்பித்துதர இசைவைப் பெறுகின்றார். இவர்கள் தான் தியாகராஜரிடத்தில் முழுமையாக அப்பியாச காணத்திலிருந்து பஞ்சரத்தினக் கீர்த்தனைகள் வரை தொடர்ச்சியாகச் சங்கீதப் பயிற்சியைப் பெறுகின்றார்கள்.

## *இசையறிவில் மந்தமான நிலையில் இருந்த மாணவர்*

தியாகராஜரிடத்தில் வாலாஜா பேட்டை வெங்கட்ர மணபாகவதர் வந்து சிட்டைக்குச் சேருவதே ஒரு சுவையான நிகழ்ச்சியாகும். மாலை நேரத்தில், திருமஞ்சன வீதியிலுள்ள தியாகராஜரின் வீட்டிலிருந்து, இனிய இசை வெள்ளம் பிரவாகம் எடுக்கும். அது தான் தியாகராஜர் தமது சீடர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் நேரமாகும். சுவாமிகளிடம் அறிமுகம் இல்லாததால் இந்த வெங்கட் ரமணர் தினமும் வீட்டின் திண்ணைப் புறத்தே வந்து தின்றுக் கொண்டே இசையின்பத்தில் ஈடுபடுவார். இவர் தினமும் அய்யம்பேட்டையிலிருந்து ஏழு மைல் நடந்து வந்தே சுவாமிகளின் வீட்டில் பாடம் கேட்பது வழக்கம்.

ஒரு நாள் வழக்கம் போல தேவகானமோ என்று வியக்கும்படியான நாத வெள்ளம் சுவாமிகள் வீட்டைச் சுற்றிலும் ஒலித்துக் கொண்டிருந்தது. வெங்கட்ரமணரும் தம்மை மறந்த நிலையில் நீண்ட நேரம் வரை அசையாப் பதுமையாக அனுபவித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது திடீரென்று வானம் கருத்து, பயங்கர இடியுடனும், கண்ணைப் பறிக்கும் மின்னலுடனும் மழை பொழியத் தொடங்கியது. தியானம் கலைந்து வெளியில் எட்டிப்பார்க்கின்றார் தியாகராஜர். ஆகா! அந்த நேரத்தில் அவர் கண்ட காட்சி 'இசை வெள்ளத்தில் மூழ்கிய நிலையில், மழை வெள்ளத்தைப் பற்றிக் கூட அறியாத ஓர் உருவம் தெப்பமாக நனைந்தபடி தெருவில் நின்றுக் கொண்டிருந்தது. இந்த உருக்கமான காட்சி தியாகராஜரின் திருவுள்ளத்தில் ஆழப்பதிந்தது. இசை நின்ற பின்னும் தன்னை மறந்து உணர்விழந்து நிற்கும் உண்மையான சிஷ்யனின் ஆர்வம் கண்டு சுவாமிகள் உள்ளம் நெகிழ்ந்து போனார். அன்று முதல் வெங்கட்ரமண பாகவதர் தியாகராஜரின் சிஷ்யனாகச் சேர்ந்து இசை படிக்கத் தொடங்குகின்றார்.

கேள்வி மாத்திரத்திலேயே பாடங்கேட்டுப் பழகிப்போனதால், தொடக்கத்தில் வெங்கட்ரமணபாகவதருக்குச் சங்கீதப் பயிற்சியில் சிறிது மந்த நிலையே காணப்பட்டது. அப்பொழுது ஸ்ரீ ராமனை வேண்டி, 'ஞானமோ சகராதா' என்ற பாடலை இயற்றித் தியாகராஜர் பாடினார். அன்று முதல் இந்த வெங்கட்ரமண பாகவதருக்குச் சிறந்த இசை ஞானம் உண்டாயிற்று. ஸ்வர ஞானத்திலும் சிறந்த வல்லவராக விளங்கினார். தியாகராஜர் தெய்வீக உள்ளுணர்வால் உந்தப்பட்டு, ஸ்ரீராம பக்திப் பரவசத்தால் மெய் மறந்து பாடும் பொழுது, அருகில் இருக்கும் சுரஞானமுள்ள மாணவர்கள் அக்கிருதிகளையெல்லாம் எழுத்தில் வடிப்பார்களாம். அத்தகைய முக்கியமான சிஷ்யர்களில் வெங்கட்ரமணரும் ஒருவராவார். இவர் தியாகராஜரிடம் 26 வருடங்கள் சிஷ்யராக இருந்திருக்கின்றார். அதன் பிறகு இவரது மகனாகிய வாலாஜாபேட்டை கிருஷ்ணசாமி பாகவதரை தியாகராஜரிடம் சிட்ச்சைக்கு அனுப்பி வைக்கின்றார்.

### *நீண்டகாலம் மாணவராக இருந்தவர்*

வெங்கட்ரமண பாகவதர் தொடர்ந்து 36 வருடங்கள் தியாகராஜரிடம் நட்புடன் இருந்தார். தியாகராஜர் மகாத்மா காந்தி என்றால், இவர் ஜவஹர்லால் நேரு போன்று இருவரும் ஒற்றுமையாக இருந்திருக்கின்றார்கள். தியாகராஜரின் மகள் சீதாலட்சுமியின் திருமணத்திற்காக, இவர் சீதாராமனின் பட்டாபிஷேகக் காட்சியைப் படமாக வரைந்து, அதனைக் கால்நடையாகவே வாலாஜா பேட்டையிலிருந்து திருவையாற்றுக்கு எடுத்து வந்து திருமணப் பரிசாகக் கொடுத்தார். இது வெங்கட்ரமணரின் சிஷ்யரான இராயவேலூர் பல்லவி எல்லையரால் வரையப்பட்ட ஓவியமாகும். குருவின் இராமபக்தியைப் பற்றி நன்கு அறிந்திருந்ததால் அவர் இத்தகைய ஓவியத்தினைக் கொண்டு வந்து திருமணப் பரிசாக அளித்தார். அதனைப் பெற்றுக் கொண்ட தியாகராஜர் ஸ்ரீராமனே கால் நடையாக நடந்து வந்ததாகப் பாவிக்கின்றார். 'என்னை ஆட்கொள்ள வேண்டி இவ்வளவு தூரம் கால்நடையாக நடந்து வந்தாயோ' என்று கேட்டு ஆனந்த வெள்ளத்தில் மிதக்கின்றார். அப்பொழுது மோகன ராகத்தில் அவர் ''நனு பாலிம்ப நடச்சி வச்சிதிவோ நா பிராணநாதா' என்னும் கிருதியை இயற்றிப் பாடுகின்றார்.

இந்தப் படம் இன்றும் தியாகராஜரின் வீட்டிலேயே வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. இப்படத்தை உறவினர்கள் சிலர் எடுத்துப் போக முயற்சிகள் செய்த பொழுது அவர்களுக்குப் பயங்கரமான கெட்ட கனவுகள் தோன்றி, படத்தை அங்கே வைத்த பிறகுதான் நிம்மதி ஏற்பட்டதாகச் சொல்லுகின்றார்கள்.

### *தியாகராஜரின் இறுதி நாட்கள்*

தியாகராஜர் சமாதி நிலையடையும் தமது இறுதி நாளைப் பத்து நாட்களுக்கு முன்பே குறித்துக் காட்டினார். தமது ஆன்மா உடம்பை விட்டுப் பேரின்பப் பெருவெளியில் கலப்பதற்கு முன் 'ஆபத் சந்நியாச முறைப்படி' பரிவிராஜக ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகளிடம் தீட்சை பெற்றுத் துறவியானார். 'தியாக பிரம்மம்' என்ற தமது பெயரை விடுத்துச் சந்நியாச ஆசிரமத்தில் 'நாதப் பிரம்மானந்தர்' என்ற புதிய பெயரைப் பெற்று உள்ளம் அமைதியடைந்தார். தமது சிஷ்யர்களையெல்லாம் திருவையாற்றுக்கு வந்து சேரும்படி செய்தியை அனுப்பினார். தியாகராஜர் குறிப்பிட்ட நாளான பிரபவ ஆண்டு, தை மாதம், புஷ்ய பகுள பஞ்சமி தினம், அதாவது 1847–ஆம் வருடம், சனவரி மாதம், 6–ஆம் தேதி வந்தது. இராமநாம சங்கீர்த்தனமும், வேதமுழக்கமும் ஒலித்துக் கொண்டிருந்தன. தியாகராஜர் 'ஷ்யாம சுந்தராங்க' என்ற தன்யாசி ராகக் கீர்த்தனையை இயற்றிப் பாடத்துவங்குகின்றார். கூடியிருந்த எல்லா சிஷ்யர்களும் உடன் பாடுகின்றார்கள்.

### *தியாகராஜர் முக்தியடைந்தார்*

பின்பு தியாகராஜர், அங்கே கூடியிருந்த எல்லோரையும் பார்த்துத் தமது இறுதி விருப்பத்தைத் தெரிவிக்கின்றார். 'எனது சிஷ்யர்களே! சங்கீத சாஸ்திரத்தைச் சலிப்பில்லாது பரப்புங்கள்! சதா காலமும் இராமனையே பாடித்துதியுங்கள்!' இது தான் சுவாமிகள் உலகுக்கு விடுத்த இறுதிச் செய்தியாகும்.

இராமநாமம் எங்கும் முழங்கிக் கொண்டிருக்கின்றது. சரியாகப் பகல் 12 மணி. தீபாராதனை செய்து கொண்டிருந்த சமயம். யோக சமாதி நிலையிலிருந்த சுவாமிகளின் திருமுடியிலிருந்து 'ஜோதி' ஒன்று ஒரு வித நாதத்துடன் கிளம்பி, வட திசை நோக்கிச் சென்றதை அங்கிருந்தவர்கள்

அனைவரும் பார்க்கின்றனர். அவ்வளவுதான் தியாகராஜரின் ஜீவாத்மா பரமாத்மாவோடு சென்று கலந்து விட்டது.

தியாகராஜர் பிறந்த போதும் சரியாகப் பகல் 12 மணி. அதே போல் எண்பது வருடங்கள் வாழ்ந்து பிறகு அவர் மறைந்த போதும் சரியாகப் பகல் 12 மணி ஆகிறது.

*தியாகராஜரின் குருபூஜை*

திருவையாற்றில் தியாகராஜர் சமாதியடைந்த நேரத்தில் வெங்கட்ரமணர் வாலாஜாபேட்டையில் இருந்தார். அப்பொழுது அவர் கனவில் தோன்றிய தியாகராஜர், 'பஞ்சமி' தினமே தனது சித்தி தினம் என்றார். அன்று முதல் ஸ்ரீரங்கம், திருப்பதி, பத்ராசலம், காசி, ஜகந்தாதம், காஞ்சிபுரம், சிதம்பரம் ஆகிய புண்ணிய ஸ்தலங்களில் யாத்திரை செய்த தமது 'ஆத்மா' ஏகாதசி தினத்தன்று பூரண சித்தியடையப் போகிறது என்றும், எனவே 'ஏகாதசி தினமே குருபூஜைக்கு உகந்த நாளாகக் கொள்ள வேண்டும்' என்றும் கூறி மறைந்தாராம். அதனால் தான் வெங்கட்ரமண பாகவதர் பஞ்சமியில் குருபூஜை கொண்டாடாமல், ஏகாதசியைக் குருபூஜை நாளாகக் கொண்டாடும் வழக்கத்தைத் தொடங்கி வைத்தார்.

*தியாகராஜர் பாடல்களின் சிறந்த பாடாந்திர வழிமுறை*

தியாகராஜரின் தொடக்க காலம், இடைக்காலம், இறுதிக்காலம் என்று கடைசிவரையிலும் உடன் இருந்தவர்கள் வாலாஜாபேட்டை வெங்கட்ரமண பாகவதர், அவர் மகன் கிருஷ்ணசாமி பாகவதர், தில்லைஸ்தானம் இராம ஐயங்கார், உமையாள்புரம் கிருஷ்ண பாகவதர், சுந்தர பாகவதர் போன்றவர்கள் ஆவர். இவர்கள் தியாகராஜரின் கிருதிகளைக் கற்றதுடன், அவற்றைச் சுரதாளக்குறிப்பு எழுதி வைத்துப் பாதுகாத்தும் வந்துள்ளனர். எனவே வாலாஜாபேட்டைப் பாடம், தில்லை ஸ்தானம் பாடம், உமையாள்புரம் பாடம் ஆகிய பாடாந்திரங்களையே மிகவும் சிறந்த வழி முறையாகக் கூறுகின்றனர்.

அதிலும் வாலாஜாபேட்டை சிஷ்ய பரம்பரையினர் வழிவந்த கிருதிகளே நிஜ சாகித்தியங்கள் என்பர். இவர்கள் 'தியாகராஜர் திருவுள்ளத்தில் தோன்றி இசைமணிகளாக உதிர்ந்த கிருதிகளுக்குச்

சரியான, பொருத்தமான ஆதார விளக்கங்களைக் கூறுவார்களாம். உதாரணமாக 'மாகுல' என்ற பதத்திற்கு விளக்கம் நாடி வந்த கீர்த்தனாச்சாரியர் ஸ்ரீசீனிவாச ஐயங்கார் அவர்களுக்கு, இவர்கள் பரம்பரையினர்தான் சரியான பொருளைக்கூறி விளக்கினார்கள் என்று பேராசிரியர் சாம்பமூர்த்தி அவர்கள் அடிக்கடி கூறுவார்கள்.

தியாகராஜரின் மறைவிற்குப் பின்பு வாலாஜாபேட்டை, கிருஷ்ணசாமி பாகவதர் நாள் தோறும் 10 கீர்த்தனைகள் வீதம், ஒரு வருடத்தில் 3,600 கீர்த்தனைகளைப் பாடி முடித்துள்ளார். இதே போன்று இவர் தொடர்ந்து சில ஆண்டுகளில் தியாகராஜரின் கிருதிகள் அனைத்தையும் பாடி, பிரபலப் படுத்தியுள்ளார். இவர் ஏ.எம்.சின்னசாமி முதலியார் என்பவருடன் சேர்ந்து தியாகராஜரின் கீர்த்தனைகளை 'Oriental Music in European Notation' என்னும் முதல் நூலாகத் தமிழகத்தில் வெளியிட்டார்.

இவரது மாணவரான உமையாள்புரம் சாமி பாகவதர் சென்னையில் தங்கி, தியாகராஜரின் கிருதிகளைப் பஜனை நிகழ்ச்சியில் பாடி வந்தார். மார்கழி, தை மாதங்களில் கபாலீஸ்வரர் கோயிலின் மாடவீதியைச் சுற்றி விடியற்காலையில் பஜனை செய்து வந்தார். அவர் நாள்தோறும் 15 கீர்த்தனைகள் வீதம் ஒரு வருடத்திற்கு 500, 600 கீர்த்தனைகளைப் பாடி முடித்துள்ளார். இவ்வாறு தியாகராஜரின் நூற்றுக்கணக்கான சிஷ்யப் பரம்பரையினரும், பல இடங்களுக்கும் சென்று தியாகராஜரின் கிருதிகளைப் பாடி வருகின்றனர். தியாகராஜரின் இசைப்பாடல்களை அவருடைய மாணவர்கள் அனைவரும் பல சமஸ்தானங்களுக்கும் சென்று பலர் முன்னிலையில் பாடிப் பரப்புகின்றார். பல ஆண்டுகளாகத் தியாகராஜரின் கிருதிகளையெல்லாம் வழிவழியாகப் பாடிவருகின்றனர். அதனால் தான் இன்று உலகம் முழுவதும் தியாகராஜரின் கீர்த்தனைகள் எல்லோராலும் பாடப்பட்டு வருகின்றன. அதனால் தான் தியாகராஜருக்கு இசைத்துறையில் உலகளாவிய இசைப்புகழ் கிடைத்துள்ளது.

## 7. தியாகராஜரின் வம்சாவளி இசைமரபு

உலக இசை வரலாற்றிலேயே மிகப்பெரிய வம்சாவளி இசை மரபினைக் கொண்டது ஸ்ரீ தியாகராஜரின் வம்சாவளியாகும். இது பத்துத் தலைமுறைகளைக் கொண்டதாகவும், 400 ஆண்டுகளைக் கடந்ததாகவும் மிகப்பெரிய வளர்ச்சியினைப் பெற்றுள்ளது. இராம காளாஸ்திரி ஐயரில் தொடங்கி, சொண்டி வெங்கட சுப்பையர், சொண்டி வெங்கடரமணையர், ஸ்ரீ தியாகராஜர், மணம்புச்சாவடி வெங்கட சுப்பையர், பட்டணம் சுப்ரமண்ய ஐயர், இராமநாதபுரம் ஸ்ரீனிவாச ஐயங்கார், அரியக்குடி ராமானுஜ ஐயங்கார், மதுரை என்.கிருஷ்ணன், சென்னை எஸ்.ராஜேஸ்வரி என்று பத்துத் தலைமுறைகளாக நீண்டு வளர்ந்துள்ளது. தொடக்கத்தில் பாட்டும், வீணையும் மட்டும் கொண்டு துவங்கிய இந்த வம்சாவளி பிற்காலத்தில் பல இசைக்கருவிகளை வாசிப்பவர்களாகவும், பரத நாட்டியத்தில் பங்கு பெறுபவர்களாகவும் கொண்டு புகழ் பெறச் செய்துள்ளது.

*முதல் தலைமுறை*

பதினாறாம் நூற்றாண்டில் தோன்றிய இராமகாளாஸ்திரி ஐயர் என்பவரே இந்த வம்சத்திற்கு முதன்முதலாக வித்திடுகின்றார். இவர் வீணையிலும், சங்கீதத்திலும் மிகப்பெரிய வித்துவானாக விளங்கியிருக்கின்றார். இவரிடம் வீணை பெருமாள் ஐயரும், தீபாம்பாள்புரம் கஸ்தூரி ரெங்கையரும், சொண்டி வெங்கட சுப்பையரும், சௌக்கம் வீர பத்ர ஐயரும், சௌக்கம் சீனுவையரும் சங்கீதம் படித்து மிகப்பெரிய மேதைகளாக விளங்கியிருக்கின்றனர்.

*இரண்டாவது தலைமுறை*

அடுத்த தலைமுறைச் சேர்ந்த சொண்டி வெங்கடசுப்பையர் தஞ்சாவூர் துளஜா மகாராஜா (1763–1787) சபையில் சமஸ்தான வித்துவானாக விளங்கினார். சென்னை மணலி முத்துகிருஷ்ணா முதலியாரால் கனகாபிஷேகம் செய்து சிறப்பிக்கப் பட்டவர். இவரிடம் இவரது மகன் சொண்டி வெங்கடரமணையரும், பைடால குருமூர்த்தி சாஸ்திரி, பைடால சுப்பராய சாஸ்திரி சகோதரர்களும் சங்கீதம் கற்று மாமேதைகளாக விளங்கினர்.

*மூன்றாவது தலைமுறை*

மூன்றாவது தலைமுறையைச் சேர்ந்த சொண்டி வெங்கடரமணையர் தஞ்சாவூர் சரபோஜி மகாராஜா (1798–1824) சபையில் சங்கீத வித்துவானாய் இருந்தார். இவரிடமே தியாகராஜர் இசைப்பயிற்சியைப் பெற்றார். இவர் திருவாரூரில் இராமபிரம்மம், சீத்தம்மா தம்பதியர்க்கு மகனாகப் பிறந்தவர். இவரது பாட்டனாரே கிரிராஜகவி என்ற சமஸ்தான வாக்கேயக் காரராவார்.

இந்த மூதாதையர்களின் தஞ்சை சமஸ்தான வேலை காரணமாகவே பிற்காலத்தில் இவர் திருவையாருக்குக் குடியேறினார்.

தியாகராஜர் காலத்துக்கு முன்பு இராகங்களை விஸ்தாரமாகப் பாடிச் சங்கராபரணம் நரசய்யர், தோடி சீத்தாராமையர், அடானா சுப்பையர், தர்பார் சீத்தாராமையர் என்று ராகங்களையே தமது சிறப்புப் பெயராகக் கொண்டவர்கள் பெரிதும் போற்றப்பட்டனர். இந்நிலையை மாற்றி தியாகராஜர் புதுப்புதுக் கிருதிகளை இயற்றி இராக பாவத்துடன் பாடமுற்பட்டார். பலவகையான இசை நாடகங்களையும், கொத்துக் கீர்த்தனைகளையும் இயற்றிப் பாடினார். இதனால் இவரது புகழ் நாடு முழுவதும் பரவியது.

சங்கீத மும்மூர்த்திகளில் மூத்தவரான சியாமா சாஸ்திரி நாகப்பட்டினத்தில் அப்புக்குட்டி நட்டுவனாரிடமும், தஞ்சை சமஸ்தானத்தில் பொப்பிலி கனம் கேசவய்யாவிடமும் இசையில் போட்டியிட்டு வெற்றி பெறுகின்றார். இதனால் சமஸ்தானத்தின் ஆதரவு எப்பொழுதும் இவருக்குண்டு. இளையவர் முத்துச்சாமி தீட்சிதரோ மணலி சின்னையா முதலியாரால் கனகாபிஷேகம் செய்விக்கப்பெற்றார். எட்டையபுரம் சமஸ்தானத்தாலும் சிறப்பிக்கப்படுகின்றார். ஆனால் தியாகரார் மட்டும் தஞ்சை சரபோஜி மகாராஜாவின் அழைப்பையும், திருவனந்தபுரம் சுவாதித்திருநாள் மகாராஜாவின் அழைப்பையும் கூட ஏற்க மறுத்துக் கடைசி வரை இறைவனுக்காகவே பாடி இசைப்பணி புரிந்துள்ளார்.

*ஐந்தாவது தலைமுறை*

தியாகராஜரிடம் பல்லவி சொஜிரி சீத்தாராமையர், திருவெற்றியூர் வீணை குப்பையர், தில்லை ஸ்தானம் ராம ஐயங்கார், உமையாள்புரம் கிருஷ்ண, சுந்தர பாகவதர் சகோதரர்கள், வாலாஜா பேட்டை வெங்கட்ரமண பாகவதர், அவரது குமாரர் கிருஷ்ணசாமி பாகவதர், ஐய்யா பாகவதர், கணேச ஐயர், லால்குடி ராமையர், கன்னையா பாகவதர், கோவிந்த சிவன் சபாபதி சிவன் சகோதரர்கள், நெய்க்காரப்பட்டி சுப்பையர், நங்காவரம் நீலகண்ட ஐயர், நேமம் சுப்ரமண்ய பாகவதர், சித்தூர் ராதா கிருஷ்ணய்யர், செவுனா வெங்கடாஜலபதி பாகவதர், அமிர்தலிங்கம் பிள்ளை ஆகியோர் சங்கீதப் பயிற்சி பெற்றனர். இவரது அத்தை மகன் மனம்புச்சாவடி வெங்கட சுப்பையரும், சியாமா சாஸ்திரியின் மகனான சுப்பராய சாஸ்திரியும் முத்துசாமி தீட்சிதரின் பேரனான சுப்புராம தீட்சிதரும்கூட இவரிடமே சங்கீதப் பயிற்சியைப் பெற்றனர். பலவிதமான இசை உருப்படிகளும், சங்கதிகள் போட்டுப் பாடும் முறையும், இவர் காலத்தில் தான் சிறப்பாக வளர்ச்சி பெற்றன.

*ஆறாவது தலைமுறை*

ஆறாவது தலைமுறையில் மனம்புச்சாவடி வெங்கட சுப்பையரிடம் தியாகராஜரின் பேரன் பஞ்சாபகேச ஐயரும், மற்றும் பல்லவி சிவராம ஐயர், சுப்புராம பாவதர், மகா வைத்தியநாத ஐயர், பட்டணம் சுப்ரமண்ய ஐயர், லாவணி வெங்கட்ராவ் ஆகியோரும் படித்தனர். வீணை குப்பையரிடம் அவர் மகன்கள் கிருஷ்ணசாமி, இராமசாமி இருவரும், திருவெற்றியூர் தியாகராஜரும், மற்றும் பிடில் பொன்னுசாமி, காஞ்சிபுரம் குப்புசாமி, கொத்தவாசல் வேங்கட்ராமய்யர் முதலியோரும் படித்தனர்.

வாலாஜாபேட்டை வெங்கட்ரமண பாகவதரிடம் மைசூர் சதாசிவராவ், ராயவேலூர் பல்லவி எல்லையர், காஞ்சிபுரம் அருணாசலம், லோகநாராயண சாஸ்திரி முதலியோர் படித்தனர். வாலாஜாபேட்டை கிருஷ்ணசாமியிடம் அவர் மகன்கள் ராமச்சந்திர பாகவதர், ராமகிருஷ்ண பாகவதர், ராமசாமி பாகவதர் சகோதரர்களும், மற்றும் பெங்களூர் முனுசாமியப்பா, திருவெற்றியூர் ராமசாமி ஐயர் முதலியோரும் படித்தனர். நங்காவரம் நீலகண்ட ஐயரிடம் அந்தானூர் சுப்பையர் சுந்தரம் ஐயர் சகோதரர்களும் பிச்சாண்டார் கோயில் சுப்பராயர், மணத்தட்டை வைத்திய நாதய்யர் இராமசாமி ஐயர் சகோதரர்களும், லால்குடி ராமையரிடம் அவர் மகன்களான குருசாமி ஐயர், ராதாகிருஷ்ணய்யரும், உமையாள்புரம் சகோதரர்களிடம் பஞ்சாபகேச ஐயர், சாமி பாகவதரும் மற்றும் இராமாமிர்தம், முத்துசாமி முதலியார், பிடில் நடேய்யர், பிடில் வெங்கோபராவ் முதலியோரும் படித்தனர்.

நெய்க்காரப்பட்டி சுப்பையரிடம் மகன் பல்லவி சேசய்யரும், கஞ்சரா ராதாகிருஷ்ணையரிடம் மகன் மைசூர் தியாகராஜனும், நேமம் சுப்ரமண்ய பாகவதரிடம் மகன் நடேச ஐயரும், கன்னையா பாகவதரிடம் மகன் ரகுபதியும், பல்லவி துரைசாமி ஐயரின் மகன்களான கோவிந்த சிவன் சபாபதி சிவன் சகோதரர்களிடம் பிடில் சாம்பசிவ ஐயரும், ஐயா பாகவதரிடம் சிவராம கிருஷ்ணய்யரும் படித்துச் சிறப்பாகப் புகழ் பெற்றுள்ளனர்.

*ஏழாவது தலைமுறை*

அடுத்துத் தோன்றிய ஏழாவது தலைமுறையில், மகா வைத்திய நாதஐயரிடம் மகன் விசுவநாத ஐயரும், மற்றும் பழமனேரி பிடில் சாமிநாத ஐயர், பட்டணம் சபேசையர், மாயவரம் வீணை வைத்தியநாத ஐயர், உமையாள்புரம் சாமிநாதய்யரும், பட்டணம் சுப்ரமணிய ஐயரிடம் ராமனாதபுரம் ஸ்ரீனிவாச ஐயங்கார், மைசூர் வாசுதேவாச்சாரி, டைகர் வரதாச்சாரி, குளத்தூர் பிடில் கிருஷ்ணமாச்சாரி ஆகியோரும், மைசூர் சதாசிவராவிடம் ஏஞ்சல் சிதம்பர ஐயர், மைசூர் வீணை சுப்பண்ணா, பெத்தாபுரம் சுப்பண்ணா, இலட்சுமண ஐயர், ஐயலையா ஆகியோரும்

படித்தனர். லால்குடி ராதாகிருஷ்ணயரிடம் கோபாலையரும், கோட்டைசாமித் தேவரும், உமையாள்புரம் பஞ்சாப கேசய்யரிடம் திருச்சி பிடில் கோவிந்தசாமிப் பிள்ளையும், பெங்களூர் முனுசாமியப்பாவிடம் பெங்களூர் நாகரத்தினம்மாளும், நாமக்கல் பல்லவி நரசிம்ம ஐயங்காரிடம் நெரூர் ரங்காச்சாரி ஸ்ரீனிவாசாச்சாரி சகோதரர்கள், நாமக்கல் சேச ஐயங்கார், மதுரை சகோதரர்கள் ஆகியோரும், திருவெற்றியூர் தியாகராஜரிடம் மதறாஸ்வேணு, சங்கரையரும் படித்து மிகவும் புகழ் பெற்று வாழ்ந்துள்ளனர்.

*எட்டாவது தலைமுறை*

எட்டாவது தலைமுறையில் ராமநாதபுரம் ஸ்ரீனிவாச ஐயங்காரிடம் அரியக்குடி ராமானுஜ ஐயங்கார், குத்தாலம் ஸ்ரீனிவாச ஐயர், காரைக்குடி ராஜாமணி ஐயங்கார், சேலம் துரைசாமி ஐயங்கார், ஜலதரங்கம் அப்பாத்துரை ஐயங்கார் முதலியோரும், வாளாடி கிருஷ்ணய்யரிடம் ஆலத்தூர் ஸ்ரீனிவாசன் சிவசுப்ரமண்ய சகோதரர்களும், பட்டணம் சுப்பையரிடம், அரிகேசநல்லூர் முத்தையா பாகவதரும், நெய்க்காரப்பட்டி பல்லவி சேசையரிடம் மணத்தட்டை துரைசாமி, சிந்தளப்பள்ளி வெங்கட்ராவும், உமையாள்புரம் சாமிநாதையரிடம் கும்பகோணம் புளூட் சீனுவாசராவும், சரப சாஸ்திரியிடம் புளூட் சஞ்சீவராவும், ஜலதரங்கம் அப்பாத்துரை ஐயங்காரிடம் ஜலதரங்கம் ரமணைய்யா செட்டியாரும் படித்தனர்.

*ஒன்பதாவது தலைமுறை*

அடுத்துத் தோன்றிய ஒன்பதாவது தலைமுறையில் அரிகேச நல்லூர் முத்தைய்யா பாகவதரிடம் மதுரை மணி ஐயரும், பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளும், எஸ்.ஜி.கிட்டப்பாவும் படித்தனர். காஞ்சிபுரம் ஜலதரங்கம் ரமணைய்யா செட்டியாரிடம் காஞ்சிபுரம் நாயினா பிள்ளையும், திருச்சி கோவிந்தசாமியிடம் மருங்காபுரி கோபால கிருஷ்ணய்யர், பாபா வெங்கட்ராமையரும், காஞ்சிபுரம் நாயினா பிள்ளையிடம் சித்தூர் சுப்ரமணியப்பிள்ளை, திருப்பாற்கடல் சீனிவாச ஐயங்கார், பிருந்தா முக்தா சகோதரிகளும், டைகர் வரதாச்சாரியிடம் எம்.டி.ராமானாதன், எஸ்.ராமனாதனும், அரியக்குடி ராமானுஜ ஐயங்காரிடம் காரைக்குடி கணேச ஐயர், மதுரை என்.கிருஷ்ணன், டி.கே.பட்டம்மாளும், மனத்தட்டை துரைசாமி ஐயரிடம் பேராசியர் பி.சாம்பமூர்த்தி ஐயரும் படித்து மிகவும் புகழ்பெற்று விளங்கியுள்ளனர்.

*பத்தாவது தலைமுறை*

பத்தாவது தலைமுறையில் டி.கே.பட்டம்மாளிடம் ஜெயராமனும், பாபா வெங்கட்ராமையரிடம், வி.தியாகராஜனும், மதுரை கிருஷ்ணனிடம் எஸ்.ராஜேஸ்வரி, ஜெயலெட்சுமி, கற்பகம் விசுவநாதனும், லால்குடி

ஜி.ஜெயராமனிடம் மகன் கிருஷ்ணனும் மகள் விஜயலெட்சுமியும் படித்து மிகவும் சிறப்பாகத் தேர்ச்சி பெற்றுள்ளனர். இவ்வகையில் இன்றுள்ள அனைத்து சங்கீத மேதைகளுமே தியாக பிரம்மத்தின் வம்சாவளி இசைமரபினில் அடங்குகின்றனர்.

பாணி, கரானா, ஸ்கூல்

வம்சாவளி இசை மரபினை மேலைநாடுகளில் 'ஸ்கூல்' என்று அழைப்பர். இம்முறையிலேயே இந்துஸ்தானி சங்கீதத்திலும் 'கரானா' என்று அழைக்கின்றனர். எனவே மேற்கத்திய இசையிலும் இந்துஸ்தானி இசையிலும் மரபு முறை கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது. ஆனால் கர்நாடக சங்கீதத்தில் புதுப்புது இசை வடிவங்கள் தோன்றி வளர்ந்ததாலும், பலவகைப்பாணிகளையும் கற்றுத் தமக்கென ஒரு சிறந்த பாணியை வகுத்துக் கொள்ள வேண்டும் என்ற விருப்பத்தின் காரணமாகவும் இங்குச் சங்கீதக் கலப்பு ஏற்பட்டுள்ளது.

*சிறந்த இசை மரபு*

சங்கீத உலகில் 'டைகர்' என்று போற்றப்படும் டைகர் வரதாச்சாரியார் ஐந்துக்கும் மேற்பட்ட பாணிகளைக் கற்றவராவார். இவர் பட்டணம் சுப்ரமண்ய ஐயரிடம் தியாகராஜர் பாணியையும், தச்சூர் சிங்கராச்சாரியிடம் சியாமா சாஸ்திரி பாணியையும், பிடில் மாசிலாமணி முதலியாரிடம் முத்துசாமி தீட்சிதர் பாணியையும், காஞ்சிபுரம் வீணை நீலகண்ட சாஸ்திரியிடம் பச்சிமிரியம் ஆதியப்பையாவின் பாணியையும், கோயம்புத்தூர் இராகவ ஐயரிடம் திருவனந்தபுரம் பரமேஸ்வர பாகவதரின் பாணியையும் கற்றுத் தேர்ந்தவர். அதனால் தான் அவரால் சங்கீத உலகில் 'டைக'ராக வலம் வர முடிந்தது.

*இசைப்போட்டியில் பெற்ற வெற்றி*

திருநெல்வேலியில் தோன்றிய செந்தில் வேலண்ணாவி பரதநாட்டிய இசையில் மகாமேதையாவார். அந்த வழியில் வந்த சென்னை வேணு தியாகராஜரின் பாணியை திருவெற்றியூர் தியாகராஜரின் மூலம் கற்றுத் தேர்கின்றார். தியாக பிரம்மத்தின் வம்சாவளியில் வந்த மகா வைத்திய நாதர் திருநெல்வேலி செந்திலண்ணாவியின் பாணியை மகாதேவ நட்டுவனாரின் மூலம் கற்றுத் தேர்ச்சி பெறுகின்றார். ஒரு கால கட்டத்தில் சென்னையில் இருவருக்கும் இடையே 1889–இல் இசைப்போட்டி நடந்த பொழுது தியாக பிரம்மத்தின் வம்சாவழியில் வந்த மகா வைத்திய நாத ஐயரே மிகவும் சிறப்பாகப் பாடி வெற்றிவாகை சூடுகின்றார். இதனால் ஸ்ரீதியாக பிரம்மத்தின் 'வம்சாவளி இசை மரபின் சிறப்பினை' நன்றாக அறிய முடிகின்றது.



ஆய்வியல் அறிஞர், சங்கீத ரத்னா, டாக்டர் கே. ஏ. பக்கிரிசாமி பாரதி, எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி., டி. இசை., டி. இதழ்., அவர்கள் மதுரை தமிழ்நாடு அரசு இசைக்கல்லூரியில் முதல்வராக இருப்பவர் இவர் இசையின் பரிணாமங்களை விளக்கி இதுவரை 250-க்கும் மேற்பட்ட கட்டுரைகளைப் பத்திரிகைகளில் எழுதியுள்ளார்.

'தியாகராஜர்' குறித்து இவர் எழுதியுள்ள ஆராய்ச்சிக் கட்டுரைகள், கருத்தரங்க, பட்டிமன்ற உரைகளைத் தொகுத்து 'சங்கீத மும்மூர்த்தி சத்குரு ஸ்ரீ தியாகராஜர்' என்னும் இந்நூலினை வெளியிடுவதில் பெருமை கொள்கின்றோம்.

இவர் இதுவரை எழுதியுள்ள சங்கீத ஆராய்ச்சிக் கட்டுரைகளை 'இசை வரலாறு, இசை வகைகள், தாள வகைகள், இசைக்கருவிகள், இசைக் கலைஞர்கள், இசை அமைப்புகள், பாடல் தொகுப்புகள்' என்னும் ஏழு தலைப்புகளில் வகை தொகை செய்யலாம். இவற்றையும் தொடர்ந்து நூல்களாக வெளியிடும் முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

'தமிழிசை'

'தமிழிசையும் தேவாரமும்'

'தமிழக இசைமரபில் தாளக்கலை'

'தமிழரின் தொன்மையான இசைக்கருவிகள்'

'நாகசுரம் இசைக்கருவி'

'திருக்கோயில் நுண்கலைகள்'

'கிராமிய இசைவடிவில் சிலப்பதிகாரம்'

என்னும் ஏழு தலைப்புகளில் இவை நூல்களாக வெளிவர இருக்கின்றன.

சங்கீத மும்மூர்த்தி சத்குரு ஸ்ரீ தியாகராஜர், என்ற இந்நூல் இசை கற்கும் மாணவர்களுக்கும் ஆய்வாளர்களுக்கும், ஆசிரியர்களுக்கும், சங்கீத வித்துவான்களுக்கும் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. இந்நூல் இசை உலகின் புதுவரவாக விளங்கி, இசைத்துறையின் வளர்ச்சிக்கு உதவிபுரியும்.

- குசேலர் பதிப்பகம்.